# ஹிபாஜத்துல் இஸ்லாம்

நிச்சயமாக நாம் அ(ந்த இஸ்லாம் மதத்)தைக் காப்பாற்றுவோம். [குர்ஆன்

ஆசிரியர்:—மௌலவீ A. R. அப்துர்ரஹீம் ஸாஹிப் (பாக்கவி)

மலர் 6 | ஹிஜ்ரி 1353 துல்ஹஜ்ஜு மீ 1935 ஞு ஏப்ரல் மீ | இதழ் 4

## திருக் குர்ஆன்

"நிச்சயமாக அல்லாஹ் விசுவாசிகளிடத்தில் அவர்களுடைய நப்ஸுகளையும் அவர்களுடைய பொருள்களையும் நிச்சயமாக அவர்களுக்குச் சுவர்க்கம் இருக்கிறது என்பதற்குப் பதிலாக விலைக்கு வாங்கிக்கொண்டான்."

மேலே கூறப்பட்டிருக்கும் தெய்வத்திருமறை வாக்கியத்தின் உட்கருத்தை நம்மவர் ஒவ்வொருவரும் சிந்தித்துப்பார்த்தல் அவசியமாகும். நமக்கு மறுஉலகில் சுவர்க்கத்தை அளிப்பதாக இறைவன் இத்திருமறையில்வாக்களித்துள்ளான். ஆனால், ஒருநிபந்தனையின்பேரில். அதாவது, நம்முடைய நப்ஸுகளுக்கும் பொருள்களுக்கும் பதிலாகத்தான் சுவர்க்கத்தை அளிப்பதாக வாக்களித்திருக்கிறான். எனவே, முஸ்லிம்களாகிய நாம், நமது நப்ஸுகளையும்பொருள்களையும் சுவர்க்கலோகத்துக்குப்பதிலாக இறைவனிடம் விற்பனைசெய்திருக்கிறோமாதலின் இந்தப்பொருள்களும், இந்த நப்ஸுகளும் நமக்குச் சொந்தமன்று. இறைவன் நம்மிடமிருந்து இவ்வாறு கிரயம்பெற்றிருப்பதால்தான் நம்மீது ஜக்காத் என்றும், ஸதக்கா என்றும், உஷ்ரு என்றும், கராஜ் என்றும் பலவித வரிகளை ஏற்படுத்தித் தன்னுடைய அடியார்களான ஏழைகளுக்கும், மிஸ்கீன்களுக்கும், வழிப்போக்கருக்கும், இதுபோன்ற இன்னுஞ் சிலருக்கும் அவைகளைக் கொடுக்கும்படியாய்த் தன்து திருமறையில் கூறி இருக்கிறான். இது பொருள் சம்பந்தமாக இறைவனிட்ட கட்டளையாகும். இனி நப்ஸுகளைப்பற்றிக் கவனிப்போம்: நப்ஸு என்பது மூச்சு என்றும், உயிர் என்றும், உடலம் என்றும், இருதயம், நினைப்பு என்றும் பொருள்கொள்ளும். இதில் உடலைப் பொருத்த மட்டில் இறைவன் 5 நேரம் தொழவும், வருஷத்தில் ஒருமாதம் நோன்பு நோற்கவும் கட்டளையிட்டிருக்கிறான். ஆத்மா சம்மந்தப்பட்ட வரையில் சகல காரியத்திலும் 'நிய்யத்' இறைவனுக்காகவே இருக்கவேண்டும் என்றும் கட்டளையிட்டுள்ளான். இதனால்தான், இறைவன் உங்களுடைய வெளிக்கோலத்தைக் கவனிப்பதில்லை, உங்களுடைய இருதயத்தைத்தான் கவனிக்கிறான் என்று கூறியுள்[illegible]. ஆகவே, நாம் செய்யும் ஒவ்வொரு காரியத்திலும் நம்முடைய நினைப்பு, நம்முடைய எண்ணம், நம்

முடைய சித்தம் ஆகியவைகளும் அவ்வல்லோன் ஒருவனுக்காகவே செய்வதாக நிய்யத் வைக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். இந்த அம்சங்களில் ஏதேனும் ஒன்றை நாம் அனுசரிக்க விட்டுவிடுவோமாயின் நம்முடைய வியாபாரம் அதாவது, சுவர்க்கலோகத்தைக் கிரயம்பெற்றிருப்பதில் பாதகமேற்படுகிறது; நமது கிரியைகளுக்குத் தக்கவாறு மறு உலகப்பேற்றை அடைவதற்கான வழி இல்லாமற் போய்விடுகிறது. இன்னும் கொஞ்சம் ஆழ்ந்துநோக்குவோமாயின், சுவர்க்கத்திற்குப் பதிலாக நமது பொருள்களையும் நப்ஸுகளையும் நாம் இறைவனுக்கு விற்றுப்போட்டதால் நம்முடைய பொருள்கள், நப்ஸுகள் ஆகிய அனைத்தையும் அவ்வல்லோனுக்கே விட்டுவிடவேண்டும். இவ் விஷயத்தில் நமது பொருள்களனைத்தையும் தன்னுடைய கட்டளைப்படி செலவு செய்யுமாறு இறைவன் கூறுவானாயின், இன்னும், மக்கள் எக்காரியத்தையும் தங்களுக்கெனச் செய்யாமல் எல்லாம் தன்னுடைய உத்திரவின்படியே செய்யவேண்டுமெனக் கட்டளையிடுவானாயின் நாம் அவ்வண்ணமே செய்துவிடக்கடமைப்பட்டிருக்கிறோம். இவ்வுலகிலுள்ள மாந்தர்கள் ஒருவரிடத்தில் ஒருவர் சம்பளத்திற்கும், கூலிக்கும் அமர்ந்து தொண்டுபுரிவதியற்கையாக இருக்கிறது. இந்நிலைமையில் கூலிவேலை செய்பவர்கள் தங்களுடைய உடலத்தையோ, உயிரையோ, சித்தத்தையோ, பொருளையோ எஜமானர்களிடம் விற்றுவிடுவதில்லை ; தங்களுக்குள்ள அவகாசநேரத்தில்குறிப்பிட்ட சிலமணி நேரங்களை அவ்வெஜமானர்கள் ஏவும் பணியைச்செய்வதற்காக நாம் ஒதுக்கி வைத்து விடுகிறோம். அக் குறிப்பிட்ட நேரத்தில் அவ்வெஜமான் கூறிய பணியைச் செய்யாமலிருந்தாலும் அல்லது வேறு பணியைச் செய்தாலும் அவ் எஜமான் நமக்குக்கூலி கொடுக்கமாட்டார்; நம்மைக்கடிந்து கொள்வார் ; நம்மைத் திட்டுவார் அல்லது நமது சம்பளத்திலொருபகுதியைப் பிடித்துக் கொள்வார். கிரயத்துக்கு வாங்காமல் சில மணி நேரம் வேலை செய்வதற்காக ஏற்படும் கூலியில் இம்மாதிரி உலகில் நடைபெறுமாயின் நமது உயிரையும், உடலையும், பொருளையும் முற்றிலும் கிரயம் வாங்கிக்கொண்டிருக்கிற இறைவன், அவைகளை நமக்கு மறுபடியும் இனமாக அளித்துச் சில நிமிஷங்கள் சிற்சில கிரியைகளைச் செய்யவேண்டுமென்றும், நமக்குள்ள பொருள்களில் ஒரு சிறிய பாகத்தை மட்டிலுமே தனக்காகச் செலவு செய்யும்படியும் கூறி இருக்கிறான். ஆகவே, இவ்வுலக எஜமானர்களுக்கு பயந்து அவர்கள் ஏவும் காரியங்களை மிக ஒழுங்காகச் செய்து இவ்வுலகத்தில் தோன்றிய எஜமானர்களிடம் நல்ல பிள்ளை என்று பெயர் வாங்க விரும்பும் நாம், எல்லோருக்கும் பெரிய எஜமானனை இறைவனிடம் நல்ல பெயர் வாங்க முயற்சிக்கலாகாதா? ஆனால், இற்றை நாளில், நம்மவரில் இப் பெரும் பொறுப்பை உணரும் சக்தி வெகுவாகக் குறைந்து விட்டது. அற்பக்கூலி கொடுக்கும் எஜமானர்களைத் திருப்தி படுத்துவதற்காக இறைவனின் கட்டளைகளை மறந்து விட்டு விடுவது ஒருபுறமிருக்க, இறைவனின் கட்டளைக்கு மாறாகவும் நடந்துகொள்ள முன் வருவது எவ்வளவு பேதமையாகும். இந்தச் சின்ன எஜமானர்கள் தங்களுக்குக்கூலிகொடுக்க மாட்டார்கள் என்று பயந்து இவ்வாறு செய்யும்போது, அந்தப்பெரிய எஜமான் தன் சொற்படி நடவாதவர்களிடம் தானளித்துள்ள பொருள்களையும் நப்ஸுகளையும் எடுத்துக் கொள்வானாயின் அப்பொழுது நாம் என் செய்தல் சாலும். இதனால்தான் இவ்வுலக எஜமானனின் கட்டளைக்காக இறைவனின் கட்டளையை மறந்து இருப்போர் இக்காசினியில் என்றும் தலைதூக்காமலிருந்து வருகின்றனர். நம்மவர் இதுகாலை பிறசமூகத்தாரைப் பார்க்கினும் அநேகம் விஷயங்களில்வீழ்ச்சியடைந்து போவதற்கு முக்கிய காரணம், நாம் இறைவனை அஞ்சாமல், அவனிட்ட கட்டளைகளை எடுத்து நடத்தாமல் அசட்டையாக இருந்து வருவதேயாகும். ஆனால் பிறசமூகத்தாரும் இறைவனின் கட்டளையை மீறித்தான் நடக்கிறார்கள், அவர்கள் மாத்திரம் முன்னேற்ற மடையவும் நாம் மாத்திரம் வீழ்ச்சியடையவும் வேண்டியதேன்? என்றவினா இவ்விடத்தில் இயற்கையாக உண்டாகுதல் கூடும். இறைவன் தனது திருமறையின் மூலம் விசுவாசிகளிடம் பேரம் செய்திருப்பதாகத்தான் கூறி இருக்கிறானே அன்றி, அவிசுவாசிகளான பிறமதத்தாரிடம் பேரம் செய்ததாகக்கூறவில்லை. தவிரவும், நாம் இறைவனுக்கு மாறாக நடப்பதானது நமக்கு உரிமையில்லாத ஒருபொருளை அபகரிப்பதாக இருக்கிறது. பிறசமூகத்தாரிடம் இறைவன் இவ்வாறான பேரம் செய்யவுமில்லை, அவர்களுக்கு மறுஉலக வாழ்வில் சுவர்க்கம் கொடுப்பதாகக் கூறவுமில்லை. அந்த சமூகத்தார் மறு உலக



வீட்டுக்குப் பதிலாகத் தங்களுடைய பொருள்களையும் நப்ஸுகளையும் இறைவனுக்கு விற்கிரயம் செய்து விடவுமில்லை. ஆதலின், அவர்கள் இவ்வுலகில் செய்யும் காரியங்களுக்கு அவர்கள் உடனே தண்டிக்கப்பட வேண்டுமென்ற அவசியமுமின்று. ஆனால், நாம் இறைவனுக்குக் கிரயம் செய்து விட்டபொருளை அக்கிரமமாக எடுத்துக்கொள்ள முயல்வதால் இறைவன் உடனுக்குடன் நமக்குச் சிலகஷ்டங்களை விட்டு, நமக்கு ஞாபகத்தை யுண்டுபண்ணி, எச்சரிக்கை செய்கிறான். ஆகவே, இவ்வெச்சரிக்கையை உணர்ந்து நாம் இறைவனின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து அவனுக்குப்பொருத்தமான காரியங்களைச் செய்ய முற்படல் வேண்டும். நமது முன்னோர்கள் இவ்வுலகில் செல்வாக்காகவும், கண்ணியமாகவும் இருந்துவந்ததற்கு அவர்கள் இப்பெரும் பொறுப்பை புணர்ந்து இறைவனின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடந்ததே முக்கிய காரணமாகும். உதாரணமாக, குலபாயோராஷிதீன்களை எடுத்துக் கொள்வோம். இவர்களிடம் தேசவரும்படி யனைத்தும் கொண்டு வந்து கொட்டப்பட்டன. இக்காலத்தில் உள்ளதைப்போல் அக்காலத்தில் பொக்கிஷ மந்திரியும் பொருளாதார நிபுணரும் நியமிக்கப்படவில்லை. வருஷாந்திர பட்ஜட் கணக்குகள் ஏற்படுத்தப்பட்டு வரவு செலவுக்குத் திட்டம் போடவுமில்லை. வருஷத்தில் இத்தனை ரூபாய்தான் வரவு வரும் என்ற மதிப்புத்திட்டமும் அவர்களிட மிருக்கவில்லை. அவ்வாறிருந்தும் அரசாங்கத்துக்கு அவ்வப்போது கிடைக்கும் பொருள்களை திருகுர்ஆனில் கூறப்பட்ட சட்டப்பிரகாரம் உடனுக்குடன் செலவு செய்து வந்தார்கள். இக் காலத்தில் கவர்னர்களும், அரசர்களும் தங்களுக்கெனச் செய்துகொள்ளும் பல சௌகரியங்களைப்போல் அவர்கள் பிரத்தியேகமான எவ் விதச் சௌகரியமும் செய்து கொள்ளவில்லை. ஹஜ்றத் அபூபக்ர் ஸித்தீக் (றலி) அவர்கள் கலீபாவாக நியமிக்கப்பட்டபின் வழக்கம் போல் தங்களது வியாபாரக் காரியத்தைச் செய்யச் சென்றபோது, ஹஜ்றத் அலீ (றலி.) ஆகியவர்கள் அவ்வாறு செய்ய வேண்டாமென்று கூறினார்கள். அதற்கு அபூபக்ர் ஸித்தீக் (றலி) அவர்கள், நான் கிலாபத் காரியத்தையே இரவுபகலாகப் பார்த்துக் கொண்டு வேறு வேலை எதுவும் செய்யாதிருந்தால் என்குடும்ப சம்ரக்ஷணைக்காக நான் என்செய்வது என்றுகூறி தங்களது வர்த்தக அலுவலையும் கவனித்துவந்தார்கள். ஆயினும், ஹஜ்றத் அலீ (றலி). ஹஜ்றத் உமர் பாறூக் (றலி). ஹஜ்றத் உதுமான்கனீ (றலி). முதலிய பிரபல ஸஹாபிகள் ஒன்று கூடி ஆலோசனை செய்து, கிலாபத் பதவியை வகிப்பவர்கள் வியாபாரம் முதலிய சொந்தக் காரியார்த்தமாகத் தங்களுடைய கவனத்தைச் செலுத்தக்கூடாது என்றும், அவர்களுடைய குடும்பசம்ரக்ஷணைக்காக எத்தனை ரூபாய் தேவையோ அதற்குத் தகுந்த அளவு பைத்துல்மாலிலிருந்து எடுத்துக் கொள்ளலாம் என்றும் தீர்மானித்ததுடன் ஹஜ்றத் அபூபக்ர் ஸத்தீக் (றலி.) அவர்கள் மாதந்தோறும் இத்தனை திர்ஹம்களைத் தங்களது குடும்பச்செலவுக்காக எடுத்துக் கொள்ளலாம் என்றும் முடிவுசெய்தனர்.

அக்காலத்தில் கலீபாவாக இருந்தவர்கள் தங்கள் குடும்பச்செலவுக்கு வேண்டிய அளவு மாத்திரம் பைத்துல்மாலிலிருந்து எடுத்துக் கொள்ள அனுமதிக்கப்பட்டிருந்தனர். கலீபாவாகவுள்ளவர்கள் தங்களிடமிருந்த அரசாங்கப் பணத்தை அமானிதப் பணமெனமதித்து அதில் தங்களது செலவுகளை எடுத்துக்கொள்ள நினைக்காமல் தங்களது சொந்தத் தொழிலின் பேரிலேயே தங்கள் குடும்பத்தைச் சம்ரக்ஷணை செய்ய விரும்பியிருக்கிறார்கள். இக்காலத்தில் நம்மவரிடம் இத்தகைய உணர்ச்சி அணுப்பிரமாணமேனும் இருக்கிறதா என்பதைச் சிந்தித்துப் பாருங்கள் ! போகட்டும். இனி வலிமார்களின் கூட்டத்தாரை எடுத்துக்கொள்வோம் : ஹஜ்றத் இமாம் அபூ ஹனீபா (றஹ்) அவர்கள் 40 வருஷகாலம் இஷாத் தொழுகைக்குச் செய்த உளுவைக்கொண்டு பஜ்ருத் தொழுகையை நிறைவேற்றினர்கள் என்று சரித்திரங்கள் கூறுகின்றன. அதாவது 40 வருஷகாலம் இராப்பொழுதில் நித்திரைசெய்யாமலிருந்து இறைவனை வணங்கிவந்தார்கள் என்பதை நாம் உணர்ந்து கொள்கிறோம். இக்காலத்தில் இரவு முழுவதும் விழிக்காவிடினும் அவ்விரவில் யாவரும் நித்திரை செய்யக்கூடிய நேரத்தில் ½ மணி நேரம் விழித்திருந்து ஆண்டவனை வணங்கும் மெய்யடியார்கள் இதுகாலை நம்மவரில் எத்தனை பேரிருக்கின்றனர் ? இவ்வாறு ஒவ்வொரு விஷயத்தையும் நாம் விளக்கிக் கொண்டே செல்வோமாயின் இவ்விபாசம் நீண்டுவிடும் ஆதலின், இம்மட்டுடன் சுருக்கிக் கொண்டோம். ஆனால், மூமின்கள் என்று

அறபிப்பாஷையில் அழைக்கப்படும் விசுவாசிகள் ஒருவிஷயத்தை மறந்து விடக்கூடாது. அதாவது, அவர்கள் தங்களது பொருள்களையும் நப்ஸுகளையும் இறைவனிடம் விற்றுவிட்டு அதற்குப் பதிலாக அவர்கள் சுவர்க்கத்தை வாங்கிக் கொண்டார்கள். ஆதலின், அவர்கள் செய்யும் ஒவ்வொருகாரியமும், நினைப்பும் அவ்வல்லோனின் கட்டளைப்படியே இருக்கவேண்டும். அவ்வாறு செய்தால்தான் அவர்கள் செய்த வியாபாரம் உண்மையான வியாபாரமாகும் என்பதை அறிந்து அதன்படி நடந்து கொள்வார்களாக.

---

## அல் ஹதீது

### சொந்தமான கிருபைக்கு பாத்தியஸ்தர்கள்

ஆறுகூட்டத்தார்களுக்கு கியாமத் (மறுமை) நாளில் அல்லாஹ் தஆலாவின் திருசமுகத்தில்கார்மானங்கிடைக்கும் (1) நீதத்தை விரும்பிய அதிகாரி (2) பேணுதலுடைய ஆலிம் (3) மறைவாக (சதக்கா) தர்மஞ்செய்பவன் (4) சதா அல்லாஹ் தஆலாவின் வணக்கத்தின் பக்கல் மனதைச் செலுத்திக்கொண்டிருப்பவன் (5, 6) அல்லாஹ் தஆலாவின் திருப்தியை நாடி ஒருவருக்கொருவர் சிநேகிதம் வைக்கும் இருவர்கள் என, நபிகள் பெருமானார் (ஸல்.) திருவாய்மலர்ந்தருளியதாக ஹஸ்ரத் அப்துல்லாஹ்ப்னு உமர் (ரலி.) அவர்களைத் தொட்டும் றிவாயத்துச் செய்யப்பட்டிருக்கிறது. ஹஸ்ரத் ஷேக்அப்துல்ஹ அவர்கள் இந்த ஹதீதை விரித்துரைக்குங்கால், மானுஷயத்தன்மையை முதன்மையாகக் கொண்டு சத்தியத்தை நிலைநிறுத்தி, அல்லாஹ் தஆலாவின் பொருத்தத்தைத் தேடுவதானது மிகமிக விரியத்தனமாகுமென்றும், இதற்காகத் தான் சத்தியத்தை விரும்புகிறவர்களுக்கு அல்லாஹ் தஆலாவின் சொந்த கிருபை கிட்டுகிறதெனக் கூறப்பட்டிருக்கிறதென்றும் தெரிவித்திருக்கிறார்கள். எனவே, இதுபொழுது நாம் அல்லாஹ் தஆலாவின் சொந்தக் கிருபையை ஒரு பக்கத்திலும், ஏமாற்றம் சதிபோன்ற துர்கொள்கையை மற்றொரு பக்கத்திலும் வைத்துப் பார்ப்போமாகில் சத்தியத்தைவிட மேலானது யாதொரு வஸ்துவுமே கிடையாதென நம்முடைய ஹிருதயமே சாக்ஷியங்கூறும். ஆகவே, இவ்வுலகின்கண் இடையிலேற்பட்டுள்ள பிரயோசனம் சுவண்டி முதலியவைகளை விட்டு, மறுமை வாழ்க்கையையும் அங்குள்ள இன்ப சுகங்களையும் பெறுவதற்கு முயற்சித்து அதனை அடைவதற்குள்ள நற்கருமங்கள் புரிவதற்கு அல்லாஹ் தஆலா நம் யாவருக்கும் அருள் புரிவானாகவும்.

### உண்மை மூமினை அறிந்துகொள்ளும் விதம்.

ஒருநாளன்று நபிகள் பெருமானார் (ஸல்.) அவர்கள், கூட்டத்தில் வீற்றிருக்கும் சஹாபிகளைநோக்கி சரியான மூமின் யாராகுமென, உங்களுக்குத் தெரியுமாவென வினவியதற்கு, அது விஷயத்தை அல்லாஹ்வும் அவனது ரசூலும் தான் நன்கறிவார்கள் என சஹாபாக்கள் தெரிவித்தார்கள். அதற்குப் பெருமானார் (ஸல்.) அவர்கள், சதாவும்—ஒவ்வொரு காரியத்திலும் தன் நாயனின் பொருத்தத்தை முன் வைத்து அதனைச் செய்பவன், ஒவ்வொரு நிமிஷத்திலும் சத்தியத்திற்கு உதவி புரிவதற்குத் தயாராக இருப்பவன் எனத்தெரிவித்தார்கள். ஆகவே, நபிபெருமானார் (ஸல்.) அவர்களின் இப்போதனையால் விஷயம் நமக்கு நன்கு வெளியாய்விட்டதால் நம்மில் இவ்வாறான அம்ஸம் இருக்கிறதா வென்பதை உற்றுணர்ந்து பார்ப்போமாக.

### அனியாயம் செய்யப்படுவேனின் சாபத்தினின்று தப்பித்துக் கொள்ளுங்கள்

நபிகள் பெருமானார் (ஸல்.) அவர்கள் ஒரு நாளன்று அநீதிசெய்வது, வரம்புகடந்து நடப்பது இவைகளின் கெடுதியைப்பற்றி கூறுவருதற்கிடையே, அநீதியானது மானிடனை நாசமாக்கி வருகிறதென்றும், அநீதி செய்யப்படுபவனின் சாபத்தினின்று தப்பித்துக்கொள்ளுங்களென்றும், அநீதி செய்யப்படுபவனின் முறையீட்டை அல்லாஹ் தஆலா கேட்டு உடனே பரிகாரஞ் செய்துவிடுகிறான் என்றும் கூறியிருக்கிறார்கள்.

---



## துருக்கியிலும் ஹிபாஜத்துல் இஸ்லாம்

அல்லாஹு தஆலாவால் அங்கீகரிக்கப்பட்டிருக்கிற மதம் இஸ்லாம் தான் என்பது திருகுர்ஆனின் போதனையாகும். ஆதலின், உலகில் சன்மார்க்கம், சத்திய மார்க்கம், இயற்கை மார்க்கம் என்பது இஸ்லாமைத் தவிர வேறொன்றுமில்லை என்ற உண்மையை முஸ்லிம்களாகிய நாம் மாத்திரமின்றி பிறமதத்தாரும் இதுகாலை உணரத்தலைப்பட்டிருப்பதுடன் அதனை வாய்விட்டுக் கூறியும் வருகிறார்கள். இக்காரண உலகில் நல்லோர்களிருக்குமிடத்தில் சில பொல்லாதவரும், சன்மார்க்கத்துக்கெதிராகத் துன்மார்க்கமும், நன்மைக்குப் பதிலாக தீமையும், பாபமும் புண்ணியமும் ஆக ஒன்றுக்கொன்று நேர் முரணை ஜோடிகள் எங்கும், எவ்விஷயத்திலும் இருந்துவருகின்றன என்பது உண்மை. இவ்வுலகில் சுயநலமும், பொது நலமும் கலந்திருக்கிறதென்பது மெய். சுயநலங் கொண்டவர்கள் மேற்கண்ட நன்மை தீமைகளிரண்டில் தங்களுக்கு இஷ்டமானதைக் கடைப் பிடித்துக்கொண்டு, தங்களது சுயநலத்தைப் பெருக்கிக் கொள்ள முயற்சிக்கிறார்கள். பொதுநலமுள்ளவர்கள் எப்பொழுதும் நன்மையானவைகளையே கடைப் பிடிக்கின்றனர். இது உலகின் சர்வ சாதாரணமான விஷயமாகும். எனவே, இப்படிப்பட்ட தருணத்தில் இறைவன் மக்களுக்களித்துள்ள விலைமதிக்கமுடியாத அரும்பொருளான அறிவைக்கொண்டு நன்மையான காரியத்தையே கிரகித்தல் அவசியமாகும். இவ்வுணர்ச்சியையே நபிமார்களும் வலிமார்களும் பெரியார்களும் நமக்குப் போதித்துச் சென்றார்கள். சுயநலமிகள் தங்களது சுயநலத்தைப் பெருக்கும் பொருட்டு ஒரு நல்ல வழியில் பிரவேசிப்பார்களாயின் அதனால் மற்றவருக்கு எவ்விதத் தீங்கு மேற்படாது. ஆதலின் சுயநலமிகள் நல்ல காரியத்தில் ஈடுபடுவதை வெறுக்கத்தக்க காரியமாக எவரும் கருதமாட்டார்களாயினும், இன்னுஞ் சிறந்த முற்போக்கான காரியத்தைச் செய்யலாகாதா என்றே அவர்களைப்பற்றி பெரியோர் கருதுவார்களேயன்றி அவர்களைப்பற்றி அத்துணை ஆட்சேபனைகள் செய்யமாட்டார்கள். ஆனல், சுயநலமிகள் பொல்லாத காரியத்தைச் செய்ய முற்படும் போது அதைப் பார்த்துக்கொண்டு நல்லோர்கள் கைகட்டி இருக்கமாட்டார்கள். இப்படிச் சுயநலமிகள் தீயகாரியங்களிலீடுபடும்போதெல்லாம் நல்லோர்கள் அதனை எதிர்த்து ஒழிப்பது இவ்வுலகம் தோன்றிய காலமுதல் இயற்கையாக நடந்துவரும் ஒரு விஷயமாகவே இருந்து வருகிறது. சுயநலமிகள் தீயகாரியங்களில் பிரவேசித்தல் என்பது பலவகைப்படும். தேச, ராஜீய வியவகாரங்களில் ஈடுபடும்போது சதியாலோசனைகளும், அராஜகமும், யுத்தமும் கொடுங்கோலாட்சியும் ஏற்படுகிறது. இப்படிப் பட்டவைகள் ராஜீயபிரசினைகளாகக் கருதப்படுகின்றன. வியாபாரம், வர்த்தகம், தொழில் முதலியவைகளில் பிர

வேசிக்கும்போது மோசஞ் செய்தல், பித்தலாட்டஞ் செய்தல், வஞ்சித்தல், ஏமாற்றுதல் முதலிய குற்றங்களைச் செய்கின்றனர். இன்னுஞ் சிலர் தங்களுக்குள்ள விசேஷச் சக்தியால் மதவிஷயங்களில் தலையிட்டு துன்மார்க்கத்துக்கு அதிக ஆக்கங்கொடுத்து அதனை வியாபிக்கச்செய்கின்றனர். இப்படி இவர்கள் செய்ய முற்படுவதில் தங்களது சுயநலத்தை அடைவதற்கு இரண்டு வழிகளுள. ஒன்று துன்மார்க்கக் கொள்கையைமட்டிலும் சன்மார்க்கமாக எடுத்துக்காட்டி சன்மார்க்கக் கொள்கையை மறைமுகமாகத் தீர்க்குதல். மற்றொன்று சன்மார்க்கக் கொள்கைகளில் பல குற்றங் குறைகளைக்கூறி அநேக ஆக்ஷேபனைகளைக் கிளப்பி அவைகளிலுள்ள நன்மையானவைகளை மறைத்து துன்மார்க்கத்துக்கு மறைமுகமாக ஆக்கங்கொடுப்பது. இப்படிப்பட்ட விஷமிகள் தங்களது நோக்கம் சித்திபெற பற்பல விதமான பெயர்களைச் சூட்டிக்கொண்டு இக்குவலயத்தைப் பாழ்படுத்தி வருகிறார்கள். இவ்வாறான சுயநலங்கொண்ட சாரார் நமது நாட்டில் தலையெடுத்துச் சன்மார்க்கப் பிரசாரகர்களென்றபோர்வையைப் போர்த்திக்கொண்டு துன்மார்க்கத்துக்கு ஆக்கங் கொடுத்து வருவதைக் கண்ணுற்ற நமது பெரியார்கள் சென்னையில் “ஹிபாஜத்துல் இஸ்லாம்” என்ற பெயரால் ஒரு சங்கத்தை நிறுவித்து, துஷ்டர்களின் துன்மார்க்கப் பிரசாரத்தை ஒடுக்கிச் சன்மார்க்கத்துக்கு ஆக்கங்கொடுக்க முன்வந்துழைத்தனர். இன்னும் உழைத்து வருகின்றனர். இன்ஷா அல்லாஹ் இனியும் உழைத்து வருவார்கள்.

இது நமது சுயநலமிகளுக்கு பெருங் கஷ்டமாகவும் நஷ்டமாகவும் இருக்குமல்லவா? ஆகவே, இதனை அவர்கள் தங்களாலியன்றவரை தூற்றுவது சகஜமல்லவா? இவ்வியல்பினுக்கேற்க இந்நாட்டிலுள்ள சுயநலங்கொண்டோர், சன்மார்க்கத்தின் பெயரால் துன்மார்க்கத்தை ஆக்கப்படுத்த முற்பட்டோர் நமது ஹிபாஜத்துல் இஸ்லாத்தையும், நமது பொதுநல ஊழியப் பெரியார்களையும் இழிமொழிகளாலும், வசை மொழிகளாலும் தங்களாலியன்றவரை ஏசியும் பேசியும் தூற்றியும் பார்த்தனர். இன்னமும் தூற்றி வருகின்றனர். இத்தோரணையில் நமது சங்கத்துக்கு “ஹிபாஜத்துல் இஸ்லாம்” என்று பெயர் வைத்ததைப் பற்றியுங்கூட ஆக்ஷேபனைகளைக் கிளப்பி, இது அறபிச் சட்டத்துக்கு ஒத்ததாக இல்லை என்றுங் கூடகூறினர். இவர்கள்இப்படி கூறியதானது, நமது பெரியார்களுக்குக் கல்வியில் அதிக பாண்டித்துவம் கிடையாது என்றும், தங்களுக்குத்தான் அதிகம் பாண்டித்துவமிருக்கிறது என்றும் பொது ஜனங்களுக்கு அறிவித்துத் தங்களது சுயநலப் பிரசாரத் துன்மார்க்க வேட்டைதான் சன்மார்க்கமென்று காட்டிக்கொள்வதற்கேயாம். ஆயினும், “சத்தியமே ஜயம்” என்ற முதுமொழி பொய்யாகுமா? அவர்களுடைய அசத்தியப் பிரசாரம் அறிஞர்களுக்குக் கொஞ்சங் கொஞ்சமாக வெளிப்பட்டது. மக்களின் அகக்கண் திறந்தது. நல்லோர் பலர் நமது சங்கத்தை ஆதரித்துப் பலங்கொடுக்க முன்வந்தனர். ஆகவே, இப்பொழுது சில நாட்களாக இச்சுயநலக் கூட்டத்தார் தங்களது சுயநல வேட்டைத் திட்டத்தை வேறு பக்கல் மாற்றிக் கொண்டதாகத் தெரிகிறது. ஆயினும், முற்றிலும் அவர்கள் இத்துறையைவிட்டு நீங்கிவிட்டார்கள் என்று இப்பொழுது கூறிவிடுவதற்கில்லை. இறைவனின் குத்ரத்தைப் பாருங்கள்! நமது நாட்டுக்கு வெகு தூரத்துக்கப்பாலுள்ள துருக்கி தேசத்தில், அதிலும், பல நூற்றாண்டுகளாக நமது கலீபாக்கள் வாழ்ந்துவந்த நகரில்—அதன் வெற்றியைக் குறித்து நபிகள் திலகம் (ஸல்.) அவர்களால் முன் அறிக்கை செய்யப்பட்ட பட்டணத்தில்—



இஸ்லாமிய உலகுக்கு வெகு காலமாக முக்கிய கௌரவம் அளித்து வந்த இடமாகிய கான்ஸ்தாந்திநோபிளில் அங்குள்ள பேரறிஞர் ஒன்றுகூடி “ஹிபாஜத்துல் இஸ்லாம்” சங்கத்தை நிறுவி இருக்கிறார்கள். ஆறு வருடங்களுக்கு முன் நமது பெரியார்கள் எந்த நோக்கத்தை முதன்மையாகக் கொண்டு இந்தப் பெயரை ஏற்படுத்தினார்களோ அதே கொள்கையையே முதன்மையாகக் கொண்டு, நமது சங்கத்துக்கு நாமிட்ட அதே பெயரை அவர்களும் தங்களது சங்கத்துக்கு இட்டிருக்கிறார்கள். ஆனால், நாம் இம்மாதிரிப் பெயர் வைத்திருப்பதை அவர்கள் அறியவுமில்லை. அவர்கள் இம்மாதிரிப்பெயர் வைப்பார்களென்று நாம் கருதியதுமில்லை, தற்செயலாக இருபெயரும் இருகொள்கையும் ஒன்றாகஅமைந்துவிட்டன. இந்தச் சம்பவம் நமது நாட்டிலுள்ள சுயநலங் கொண்ட துன்மார்க்கப் பிரசாரத்தின் கூற்றை அடியுடன் மறுத்து, நமதுமுயற்சிக்கு அதிக ஆதிக்கத்தைத்தரக் கூடியதாக இருக்கிறது. (அல்ஹம்துலில்லாஹ்) தவிரவும், துருக்கி அரசாங்கத்துத் தலைவரான காஜீமுஸ்தபா கமால்பாஷா அவர்கள் அந்நாட்டிலுள்ள மார்க்க அறிஞர்களுக்கு அதிக உற்சாகமும் ஆதரவுமளித்து, இவ்வாறாக சன்மார்க்கப் பிரசாரம் புரிய உதவிசெய்யவும் முன் வந்திருக்கிறார் என்ற செய்தி நமக்கு ஒரு மாதத்துக்குமுன் கிடைத்தது. இப்பொழுது அதே காஜீமுஸ்தபா கமால்பாஷா அவர்கள் உலகிலுள்ள சுயேச்சை வாய்ந்த முஸ்லிம் மன்னர்களின் கமிட்டி ஒன்றையமைத்து, புண்யக்ஷேத்திரங்களையும் மத பாதுகாப்பையும் கவனிப்பதற்கான முயற்சியில் ஈடுபட்டிருப்பதாகத் தகவல் கிடைத்திருக்கிறது. இறைவன் இவர்களுக்கு இவ்வரும் பெரும் நோக்கத்தில் வெற்றி யளிப்பானாக.

இதிலிருந்து நமது நாட்டு அறிஞர்கள் அன்று 6 வருஷங்களுக்குமுன் எடுத்துக்கொண்ட பிரயாசையும், நோக்கமும் உலகிலெங்குமுள்ள அறிஞர்களும், சன்மார்க்கர்களும் எடுத்துக்கொள்ளக் கடமைப்பட்டுள்ள காரியமேயன்றி வேறில்லை என்பது இப்பொழுது வெளியாகிறது. ஆதலால், சன்மார்க்கர்களாகிய நம்மவர், நமது பெரியார்கள் செய்து வரும் இச்சன்மார்க்க ஊழியத்தில் இன்னும் அதிகமான அக்கரையும் சிரத்தையும் காட்டி, அவர்களுக்கு உற்சாகத்தை அளிப்பதுடன், அவர்கள் ஏற்படுத்திய ஸ்தாபனமாகிய நம் “ஹிபாஜத்துல் இஸ்லாம்” சங்கத்தைப்பலப்படுத்த முன்வருமாறு வேண்டுகிறோம். இச்சங்கத்துக்குப் பல முறையாலும் உதவிசெய்ய வழியுண்டாயினும், இச்சங்கத்தாரால் நடத்தப்படும் அரிய சஞ்சிகையாகிய நமது “ஹிபாஜத்துல் இஸ்லா”மை யாவரும் வாங்கிப் படித்துப்பார்த்து இதை அதிகமாக மக்களிடை பரவும் படி செய்வது சிறந்த உதவியாகும். ஏனெனில், நமது சங்கத்தாரின் நோக்கமும், முயற்சிகளும் இச்சஞ்சிகை மூலமே நாட்டில் பரவவேண்டியதாக இருப்பதால், இச்சஞ்சிகை நாட்டில் எவ்வளவுக்குப் பரவுகிறதோ அவ்வளவுக்கு சன்மார்க்கக்கொள்கைகள் வியாபித்து நிற்கும். ஆதலின் வாசகநேயர்களும், பொது நலப்பிரியர்களும், சன்மார்க்கர்களும் இச்சஞ்சிகையை ஆதரித்து வாங்கிப் படித்துப் பயன் பெறுவதுடன், தங்கள் நண்பர்களையும் இதற்குச் சந்தாதாரர்களாகச் சேரும்படி செய்து இப்புண்ய காரியத்தில் பங்கெடுத்துக்கொள்ளும்படி வேண்டுகின்றோம்.

---

## சிலோன் சந்தா நேயர்கட்கு!

அன்பர்கள் தங்கள் சந்தாக்களை மணியாடர் மூலமாகவாவது, அல்லது ஆளைப் **A. M. K.** ஆலிம் சாஹிப் (220, 2-ம் குறுக்குத் தெருவு, கொளும்பு) அவர்கள் மூலமாவது அனுப்பிவைக்குமாறு வேண்டுகிறோம்.

# தொழுகை

நிச்சயமாகத் தொழுகையானது மானக்கேடானவைகளையும் வெறுக்கத்தக்கதையும் விலக்கும்.

சோதரீர்! தொழுகையை நாம் யாவரும் தொழுது வருகிறோம். முஸ்லிமாக வுள்ளவர் எவரும் தொழுகையை நல்லதல்லவென்று கூறமாட்டார். தொழுகவேண்டியதில்லை என்றியம்பவும் மாட்டார். ஒருவரை ஒருவர் தொழும்படி ஏவுவர். குழந்தைகளைப் பெரியோர்கள் பார்க்கும் போதெல்லாம் தொழும்படியே தீர்க்கிது செய்வர். ஒவ்வொரு இடத்திலும், தாய், தந்தை, தமையன் முதலிய யாவரும் தங்கள் சிறுவர்களைத் தொழும்படியே ஏவுவர். இதல்லாமல் ஊரிலுள்ள பெரியார்கள் யாவரையும் தொழும்படி ஏவுகிறார்கள். நமது இந்தியநாட்டின் எல்லைப்புற மாகாணத்தில் தொழுகைக்கென்றே பிரத்தியேகமான வாலண்டியர்களும், தொண்டர்களும், ஊழியர்களும் ஏற்படுத்தப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் தினசரி அதிகாலையில், கடும்பனியையும் பாராமல் நித்திரையிலிருப்பவர்களை எழுப்பித் தொழுகைக்கு வரும்படியாக அழைக்கிறார்கள். தினசரி நாம் ஐந்து வேளை தவறாமல் தொழுகிறோம். ஒவ்வொரு மஸ்ஜிதிலும் உலமாக்கள் தொழுகையைப் பற்றி அதிகமாக உபதேசஞ் செய்கிறார்கள். ஆனால், தொழுகையால் இன்ன பயன் விளையும் என்று இறைவன் தனது வேதத்தில் கூறியிருக்கிற பயன் நமக்குக் கிடைத்திருக்கிறதா? என்பதை சற்று நிதானித்துப்பார்ப்போமாக. தொழுகையினாலேற்படும் எண்ணத் தொலையாத பயன்களையும் நன்மைகளையும் பெரியார்கள் நமக்கு எத்தனை முறையோ எடுத்துக் கூறி இருக்கிறார்கள். நாமும் பிறமதத்தாரிடம் தொழுகையினாலேற்படும் பயன்களை வாய் கூசாது கூறியும் வருகிறோம். கைகூசாது பத்திரிகையில் எழுதியும் வருகிறோம். அவ்வாறு கூறியும் எழுதியும் வருகிற நமக்குத்தான், இறைவன் திருகுர்ஆனில் தொழுகையினாலேற்படக் கூடிய பயன்களைப்பற்றிக் கூறியிருக்கிற பயன்கள் ஏற்பட்டிருக்கின்றனவா? என்று சிந்தித்துப் பார்ப்போமாக. இந்தக் கேள்விக்கு நூற்றுக்குத் தொண்ணூறுபேர் இல்லையென்றே கூறுவர். சிற்சிலருக்கு இந்தப்பயன் ஏற்பட்டிருக்கலாம். ஆனால், பெரும்பாலருக்கு இற்றைநாளில் இல்லை என்று சொல்வதில் நாம் யாருக்கும் அஞ்சவேண்டியதின்று.

பின்னை, அல்லாஹுதஆலாவின் சொல் பொய்யாகுமா? அவனது வாக்குக்கு மாறு நடக்குமா? திருகுர்ஆன் பொய்யா என்ற சந்தேகம் நமக்கு வேண்டாம். திருகுர்ஆன் பொய்யல்ல, மெய்யேயாகும். நாயனின்வாக்கு நிச்சயமாக நிறைவேறும். அது தவறமாட்டாது. அவ்வாறெனில் நம்மிடம் தொழுகையின் பலன் எங்கே? இதற்குநாம் சுருக்கமாகப் பதில் கூற விரும்புகிறோம். நாம் தொழுகும் தொழுகையில் முற்காலத்துப் பெரியார்களின் தொழுகைகளிலிருந்த பூணிப்பும், பற்றும், பயபக்தியும் இல்லை என்பதுதான் இதற்குப்பதில். முற்காலத்திலிருந்தவர்கள் நாயனைத் தொழும் விஷயத்தில் காட்டிவந்த பயபக்தியும், பூணிப்பும், பணிவும் இக்காலத்தில் அத்திபூத்தது போல் எவரேனும் ஒருவர் இருவரிடத்தில் இருக்குமோ என்னவோ. ஆனால் பெரும்பாலரிடம் இருக்கவில்லை என்று துணிந்து கூறலாம். நபிகள் நாயகம் (ஸல்.) அவர்களது துணைவர்களான ஸஹாபிகள் ஜும்ஆத் தொழுகைக்காக அன்றைய இரவிலிருந்தே மஸ்ஜிது நபவியில் ஒருவரை ஒருவர் முந்திக்கொண்டு கூடிவிடுவார்கள் என்றும், தொழுகை முடிந்தபின்னர் அசர் தொழுகை நேரம் வரும்வரை மஸ்ஜிதிலேயே தங்கி இருந்து அப்புறம்தான் செல்வார்களென்றும், சிலர் மஃரிபுத் தொழுகையை முடித்துக் கொண்டுதான் வீடு திரும்புவார்களென்றும் நாம் படித்திருக்கிறோம்.

இம்மாதிரியான பூணிப்பும், பக்தியும், பணிவும் இக்காலத்தில் நாம் காண்பிக்க இயலவில்லையென்றால், குறைந்தபக்ஷம் ஜும்ஆத் தொழுகையின் நேரம் வருகிறது என்பதை அறிவிக்கும் பாங்கு சொன்ன உடனேயாவது மஸ்ஜிதுக்கு வரக்கூடாதா? இக்காலத்திலுள்ள மஸ்ஜிதுகளிற் சில இடங்களிற்போய்ப் பார்த்தால் இமாம்குத்பா ஓதும்போதும், குத்பாஓதி முடிந்து தொழுகைக்குத் தக்பீர் கட்டும்போதுங் கூடச் சிலர் உளுச்செய்துகொண்டிருப்பதைக் காணலாம். பின்னர் தொழுகை முடிந்தவுடன் சிலர் சுன்னத்து கூடத்தொழாமல் மஸ்ஜிதை விட்டு வெளியிற் செல்லுவர். இவர்களுக்கு 'எட்டு முஸல்லி' என்று கூறுவது பொருந்தும். தொழுவதற்காக மஸ்ஜிதுக்கு வந்தபின் 5-6 நிமிஷங்கள் மஸ்ஜிதிலேயே தங்கிஇருந்து ஏதேனும் "அவ்ராது"களை ஓதக் கூடாதா? சுன்னத்து, நபில் தொழுகை போன்ற வணக்கங்களைப் புரியலாகாதா? என்பதுதான் இப்பொழுது நாம்கவனிக்கவேண்டிய முக்கிய விஷயமாகும். முற்காலத்திலுள்ளவர்கள் காட்டுமிராண்டிகளாகவும் உலக நாகரீகம் தெரியாத அறிவாராய்ச்சி யற்றவர்களாகவும் தொழிலில்லாதவர்களாயுமிருந்தனராதலின் சதா என்னேரமும் பள்ளிவாயலையே கட்டியழுதனர்; அதுபோல் இக்காலத்தில் நாமும் செய்வோமாயின் நமதுகதி என்னவாகும்; நாம் தொழில் பார்க்கவேண்டாமா? நாம் வர்த்தகத்தைக் கவனிக்கவேண்டாமா? என்று சிலர் கூறவும் கூடும். முற்காலத்திலுள்ளவர்கள் அவ்வாறிருந்ததால் உலகில் சிறுமையடைந்திருந்தார்களா? அல்லது பெருமையடைந்திருந்தார்களா? இக்காலத்திலுள்ளவர்கள் தொழில் முறையை ஜரூராகப் பார்ப்பதுகொண்டு மற்றெல்லாச் சமூகத்தாரைப் பார்க்கினும் மேம்பட்டுவிட்டார்களா? முன்னேற்றமடைந்துவிட்டார்களா? என்பதை அவர்கள் கவனித்துப் பார்த்தால், அவர்கள் கூறுவதற்குத்தக்கவிடை தானாகவே கிடைக்கும். முற்காலத்திலுள்ள நம்மவர் உலகாதிபதிகளாகவும்; தலைவர்களாகவும், ஆளுஞ் ஜாதியினராகவும் திகழ்ந்தார்கள் என்பதும், இக்காலத்திலுள்ள நம்மவரில் பெரும்பான்மையினர் ஆளப்படும் ஜாதியாராகவும் பிறருக்கு அடிமைப்பட்டவராகவும் இருப்பது மாத்திரமின்றி, அடிமைப்பட்ட இதர சமூகத்தாரைப் பார்க்கினும் பின்னடைந்தவர்களாகவும், பிற்போக்கான ஜாதியாகவும் மற்றவரால் கருதப்பட்டும் வருகிறார்கள். இதற்குக் காரணம் அக்காலத்திலுள்ளவர்களுக்கு மார்க்க பக்தி அதிகமாக இருந்ததால், நமது அத்தியாவசியமான காரியங்களாகிய சாப்பாடு, நித்திரைபோன்ற காரியங்களை நாம் இப்பொழுது எவ்வளவு ஜாக்கிரதையாகச் செய்கிறோமோ அதைப் பார்க்கினும் பன்மடங்கு அதிகமாக அவர்கள் றஹ்மான் ஏற்படுத்திய முக்கிய கடமைகளான தொழுகை முதலியவைகளைக் காலா காலத்தில் நிறைவேற்றுவதில் செலுத்தி வந்தார்கள். தொழுகைக்காக அவர்கள் நித்திரையையோ, சாப்பாட்டையோ பெரிதாக மதிக்கமாட்டார்கள். நித்திரையில் பங்கம் வந்துவிட்டால் அதனால் எவ்வித நஷ்டமுமில்லை. ஆனால், தொழுகையில் மாத்திரம் பங்கம் வருதல் கூடாது என்பதைப் பெரிதாக மதித்தனர். இதற்கு அதிகமாக உதாரணங் கூறவேண்டியதில்லை.

நபிகள் நாயகம் (ஸல்). அவர்களும் ஸஹாபிகளும் மக்கமாநகரை ஹிஜ்றத்துச் செய்து மதீனமாநகரம் புகுந்தது ஏன்? என்பதைச் சிந்தித்துப் பாருங்கள்! மக்காவில் உணவுப்பஞ்சம் ஏற்பட்டுப் பஞ்சம் பிழைப்பதற்காகவா அவர்கள் மதீனமா நகரம் சென்றார்கள்? அல்லது மக்காவிலுள்ள வியாபார வசதிகளைப் பார்க்கினும் அதிகமாக மதீனாவில் வியாபார வசதிகள் இருக்கின்றன, வியாபாரம் செய்து அதிகமான பொருள்திரட்டலாம் என்பதற்காகவா சென்றார்கள்? அல்லது தங்களுடைய பந்துக்களும், மித்திரர்களும், இனத்தார்களும் மதீனாவில் அதிகம் இருக்கிறார்கள் என்று அங்கு சென்றார்களா? அன்று, அன்று. மக்காபுரியில் இவ்வசதிகளெல்லாம் அவர்களுக்குக் குறைவற இருந்தன; பந்துக்களும் அன்பர்களும் ஏராளமாக இருந்தனர் ஆயினும், நிம்மதியாக நாயனைத் தொழுவதற்கு மட்டிலும் அங்கு இடங்கிடைக்கவில்லை. நாயனை தொழுவதற்கு வேண்டிய உரிமைகளை மக்காவாசிகள் முஸ்லிம்களுக்கு அளிக்கமறுத்து விட்டனர். நாயனை வணங்குவதற்கு உரிமையளிக்கப் படாவிடில் உங்களது பந்தத்துவமும், உங்களது சினேகத்துவமும் எங்களுக்குத் தேவை இல்லை என்பது முஸ்லிம்களின் நோக்கம். நாயனை நிம்மதியாகத் தொழவேண்டும்; இதற்கான வசதி கிடைத்தால் போதும் என்ற ஒரே எண்ணத்தின் பேரில் ஸஹாபிகள் தங்கள் மனைவி மக்களையும், பெண்டு பிள்ளைகளையும், உற்றார் உறவினரையும், சொத்துச் சுகத்தையும் துறந்து வீடு வாசலைவிட்டு, உடுத்திய உடையுடன் வெளியேறினர். தங்களுக்குத் தொழுவதற்கான வசதி இருக்கும்பொருட்டு மதீனாபுரி வந்தனர்.

மதீனாவிலுள்ளவர்கள் மக்கா வாசிகளுக்கு இடங்கொடுத்து, தொழுவதற்கு வேண்டிய சகல சந்தர்ப்பங்களையும் அவர்களுக்கு அளித்தனர். மக்காவாசிகள் வியாபாரவர்க்கத்தின

ராக இருந்ததால் தங்களுடைய நாணயத்தைக் கொண்டு மதீனுபுரியைச் சிறந்த வியாபார ஸ்தலமாக ஆக்கினர். "ஆண்டவனைப் பணிவோருக்கு அனைத்தும்பணியும்" என்றபடி மதீனுவிலுள்ள மற்றைய ஜனங்களும் இவர்களைக் கொண்டாடி, இவர்களது தலைமைத்தனத்தை ஏற்றுக்கொண்டு, இவர்களதுசொற்கேட்டு நடந்தனர். அக்கம்பக்கத்திலுள்ளவர்களும் அவ்வாறே செய்தனர். சில வருஷங்களுக்குப் பின் மக்காவாசிகளும் இவர்களுக்குக் கீழ்ப்படிந்து பரிசுத்த கஃபாவின் சாவியை இவர்களிடம் ஒப்புவிக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டது.

நபிகள் நாயகம் (ஸல்.) அவர்கள் மக்காவில் குறைஷியர்களால் எதிர்க்கப்பட்டு, பல விதத்தாலும் தொந்தரை கொடுக்கப்பட்டும் இருந்த காலத்தில் தொழுகையை ஒரு க்ஷணப் பொழுதேனும் பிந்தவிடாமல் நிறைவேற்றி வந்தார்கள். ஸஹாபிகளும் தங்களுக்கேற்பட்ட சொல்லொணுக் கஷ்டங்களையும் சகித்துக் கொண்டு தொழுகையை விட்டனரல்லர். ஹஜ்றத் ஜைது ரலியல்லாஹு அவர்களை மக்கத்துக் குறைஷியர்கள் ஏமாற்றிப் பிடித்துவந்து தூக்கில் போடப்போன போது அவர்களிடம் உமக்கு என்ன வேண்டுமென்று கேட்டகாலே, இரண்டு ரக்கஅத்துத் தொழுதுகொள்ளச் சந்தர்ப்பம் வேண்டுமென்று வேண்டினுர்கள். தூக்குமேடைக்குச் செல்லும்போது கூட முற்காலத்து முஸ்லிம்கள் தொழுகையைத் தான் பெரிதென மதித்து அதனை நிறைவேற்றிக் கொள்ளவே சந்தர்ப்பம் எடுத்துக்கொண்டிருக்கிறுர்கள். இதற்குக் காரணம் அவர்களுக்குத் தொழுகையில் ஏற்படும் இன்பம் வேறெதிலு மேற்படாதிருந்ததேயாம். இவர்கள் தொழுகையை மிகுந்த பயபக்தியுடன் நிறைவேற்றி வந்தனர். தொழுகையைத் தவிர வேறெதுவும் அவர்களது மனக்கவலையை மாற்றக் கூடிய அருஞ்சஞ்சீவியாக இருக்கவில்லை. இந்தத் தொழுகையின் பரக்கத்தால் முற்காலத்திலிருந்தவர்களின் துற்குணங்கள், துர்நடத்தைகளெல்லாம் நீங்கி மாசற்ற பெரியார்களாக இருந்தார்கள்.

"உம்து ரப்பை நீ நேரில் பார்ப்பதுபோல் வணங்குவதுதான் இஹ்ஸான். அவனை நீ பார்க்காவிடினும் அவன் உன்னைப் பார்க்கிறுன்" என்று நபிகள் நாயகம் (ஸல்.) அவர்கள் திருவாய்மலர்ந்தருளிய ஹதீதைக் கடைப்பிடித்து அவர்கள் வணக்கம் புரிந்து வந்தார்கள். இதனுல் இறைவன் தனது மறையில் கூறியுள்ள விஷயங்களெல்லாம் அவர்களுக்கு நிகழ்ந்தன. இக்காலத்திலுள்ளோர் தொழுகிறுர்கள்; அவர்களது தொழுகையைத் "தொழுகை இல்லை" என்று யாம் கூறத்தயாரில்லை. இவர்கள் பர்லு வாஜிபு சுன்னத்து முதலியவைகளை நிறைவேற்றி விடுகின்றனர். இதனுல் இவர்கள்மீதேற்பட்டகடமை நிறைவேறிவிடுகிறது. ஆயினும், இவர்களில் நூற்றுக்குத் தொண்ணூறுபேர்களின் தொழுகையில் பயபக்தி என்ற முக்கிய அம்சம் இல்லாதிருப்பதால் இவர்கள் தொழுகையில் அடைய இருக்கும் இதர பலன்களை அடைய முடியாத நிலைமையிலேயே இருக்கிறுர்கள் என்ற விஷயத்தை வருத்தத்துடன் தெரிவிக்க வேண்டியதாக இருக்கிறது. தொழுகைக்கு பர்லு வாஜிபு சுன்னத்து, முஸ்தஹப்பு போன்ற காரியங்கள் அவயவங்களைப் போலிருக்கின்றன. பயபக்தி என்ற விஷயம் உயிரைப்போலிருக்கிறது. ஆகவே, பயபக்தியின்றித் தொழுவதானது உயிரற்ற உடலத்துக்கு ஒப்பாக இருக்கிறது. எனவே, இதுவரை நாம் தொழுத தொழுகையில் மேல்மிச்சமாக அடையவேண்டிய பயனை நாம் அடையத்தக்கவிதமாகத் தொழுகத் தவறிவிட்டாலும், இனிமேலேனும் அப்படிப்பட்ட பயனை அடையத்தக்க முறையில் தொழவேண்டும் என்பதுதான் இவ்வியாசத்தின் கருத்தாகும். இவ்வாறு நாம் இறைவனை வணங்க முற்படுவோமாயின், முற்காலத்தில் நம்மவர் அனுபவித்த இம்மை மறுமை பேறுகளை நாமும் அடைவோம் என்பதிற் சந்தேகமில்லை. இறைவன் நம்மனைவருக்கும் அப்படிப்பட்ட வணக்கம் புரிய நல்லுதவிசெய்வானுக. ஆமீன்.

---

## பினங் சந்தா நேயர்கட்கு !

அபிமானிகளாகிய நமது சந்தா நேயர்கள் தாமதியாது தங்கள் சந்தா பாக்கிகளை அவ்விடம் ஜனப் N. K. முஹம்மது கௌஸ் சாஹிப் (117 பினங் ஸ்டீட்) இடம் செலுத்திவிடுமாறு வேண்டுகிறோம்.

# பிரஞ்சுக்காரர்களின் பிரித்தாளும் தந்திரம்

ரீப் தேசத் தலைவர் காஜீ அமீர் அப்துல் கரீம் அவர்களையும் ரீப் தேசத்தையும், அவரது சமூகத்தாரையும் நம்மவர் நன்கறிவர். ஆதலின், அவர்களை நாம் அறிமுகப்படுத்தி வைக்கவேண்டியதின்று. ஆனுல், அத்தேசத்தார் ஏன் ஸ்பானியர்களுடனும், பிரஞ்சுக்காரர்களுடனும் யுத்தம் செய்தனர்; ஐரோப்பியர் நாடு பிடிக்கும் நோக்கத்தில் அவர்கள் கையாளும் உபாயம் என்ன வென்பதை இவ்வியாசம் விளக்கவல்லதாக இருப்பதால் நம்மவர் ஊன்றிக் கவனித்து "மாற்றுனுக்கிடங் கொடேல்" என்ற முதுமொழியைக் கடைப்பிடிக்குமாறு வேண்டிக் கோள்கிறேம். (ப. ர்.)

ஆப்பிரிக்கா கண்டத்தின் வடமேற்குப் பாகத்துக்கு "மஃரிபே அக்ஸா" என்றும், மஃரிபுதேசம் என்றும், மொரோக்கோ தேசம் என்றும் பெயர். அத்தேசத்தில் 'பர்பரி' வகுப்பு முஸ்லிம்களும், அசல் அறபி வம்சத்து முஸ்லிம்களும் வசிக்கிறுர்கள். தங்களுடைய சுயநலத்தை நாடி ஐரோப்பாவிலிருந்து சமீப காலங்களில் அங்கு சென்று குடியேறி இருக்கும் ஐரோப்பிய கிறிஸ்துவர்களைச் சேர்க்காமல் அங்குள்ள புராதனக் குடிகளை மட்டிலும் கணித்துப் பார்ப்போமாயின், அத்தேசத்தில் சில ஆயிரம் யூதர்களைத்தவிர எஞ்சியுள்ளவர்களனைவரும் முஸ்லிம்களேயாவார்கள். இத்தேசத்தார் பர்பரி பாஷையைத் தாய் பாஷையாகக் கொண்டவர்கள். இவர்களனைவரும் முஸ்லிம்களாக இருப்பதால் இவர்களின் கல்விப் பாஷை அறபியாகும். ஆகவே, இங்குள்ளோர் அறபியும், பர்பரியும் பேசுபவர்களாவார்கள். புராதன காலத்திலேயே இங்கு இஸ்லாம் மதம் பரவிவிட்டதால் இங்குள்ள கல்வி பயிற்சி, நூல்வளர்ச்சி அனைத்தும் 13 நூற்றுண்டுகளாக அறபியிலேயே நடைபெற்று வருகிறது. இங்குள்ள பர்பரியர்கள் யுத்தப் பிரியர்களாகவும், வீரர்களாகவும் இருந்துவருவதால், முஸ்லிம்களின் எழுச்சியின்முன் ஈரான், உரோம ஏகாதிபத்தியங்கள் சுமார் பத்து வருஷ காலம் எதிர்த்து நின்று அப்பால் அடங்கி விட்டன. ஆயினும், இத்தேசத்தார் இவர்களுக்கெல்லாம் பிந்திக் கடைசியில்தான் முஸ்லிம்களுக்குக் கீழ்ப்படிந்தனர். இங்கு இஸ்லாம் பரவி, இத்தேசத்தார் இஸ்லாத்தைத் தழுவிய பின், இங்கு வேறெந்த மதமும் சென்ற 13 நூற்றுண்டுகளாகப் பரவுவதற்கிட மேற்படவே இல்லை. அவ்வாறு பரவ இத்தேசத்தார் இடங்கொடுக்கவுமில்லை. இத்தேசத்திலுள்ளவர்களனைவரும் 'மாலிக்'மத்ஹபைத் தழுவிய சுன்னத்துவ ஜமாஅத்தார்களே யாவர்.

இத்தேசத்தில் புராதன காலத்திலேயே இஸ்லாம் மதம் பரவி, கலப்பற்ற இஸ்லாமாகவே இருந்து வருவதால், மிகமிகப் பூர்வீகமான ஸ்தாபனங்கள் இன்றும் அந்நாட்டில் இருந்து வருகின்றன. பூர்வீக காலத்தில் கட்டப்பட்ட ஜாமிஆ மஸ்ஜிது இன்னமும் அந்நாட்டில் இருக்கிறது. ஆயிரம் வருஷங்களுக்கு முன்னர் "பாஸ்" (Fex) என்ற நகரில் மஸ்ஜிதுடன் கட்டப்பட்ட 'க்ர்ரூபீன்' என்ற மத்ரஸா இன்னும் கல்வி என்னும் அறிவமுதை அந்நாட்டாருக்கு அளித்து வருகிறது. அங்குள்ள குத்துபுகானு (புத்தகாலயம்-லைப்ரரி) பூராதன காலத்தில் இயற்றப்பட்ட அநேகம் அரிய பெரிய கிரந்தங்களின் கையேட்டுப் பிரதிகளை இன்னமும் பேணிக்காப்பாற்றிக் கொண்டிருக்கிறது.

சென்ற நூற்றுண்டின் இறுதிவரை இத்தேசத்தில் முஸ்லிம் அல்லாதாரின் ஆதிக்கம் ஏற்படுவதற்கு எள்ளத்தனையுமிட மேற்படவில்லை. ஆனுல், நவீனயுத்தக் கருவிகளும், வெடிமருந்துகளும், பீரங்கிகளும், நவீன ஆராய்ச்சி உயிர்க்கொல்லிகளும் அவர்களுக்கு நல்ல பழக்கத்திலில்லாததால் இஸ்லாமிய உலகத்தின் பல தேசங்களும் ஐரோப்பியருக்கு ஒன்றன்பின் ஒன்றுக இரையாகி வந்தது

போல் இத்தேசமும் ஐரோப்பியரின் நாடாளும் ஆசைக்கு இரையாகவேண்டியதாக ஏற்பட்டது. பிரஞ்சுக்காரர்கள், பிரிட்டிஷார், இத்தாலியர், ஜெர்மானியர், ஸ்பானியர், ஐரோப்பிய வல்லரசுகள் இஸ்லாமிய உலகைச் சேர்ந்த வடமேற்கு ஆப்பிரிக்காவைப் பங்கு போட்டுக்கொள்வதில் ஒருவரைவிட ஒருவர் முந்திக்கொண்டுவந்தனர்.

ஆகவே, வல்லரசுகள் தங்களுக்குள் இத்தேசங்கள் சுலபமாக வயப்பட வேண்டுமென்பதற்காக தங்களுக்குள் இரகசிய ஒப்பந்தங்கள் செய்துகொண்டு, ஆப்பிரிக்கா சம்பந்தப்பட்டவரை எகிப்தை பிரிட்டனும், திருப்போலியை இத்தாலியும், மஃரிபு தேசத்தை பிரான்சும் ஸ்பெயினும் வசப்படுத்திக்கொள்வதற்கான ஏற்பாடு செய்துகொள்ளப்பட்டது. இவ்வுடன்படிக்கையின்படி இவ்வரசாங்கங்கள் அற்பகாரணங்களைப் புகலாகக்கொண்டு பெரிய நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டு இப்பிரதேசங்களைத் தங்கள் வசப்படுத்திக்கொண்டன. ஆனால் இவ்வரசாங்கங்களுக்கு ஏற்படுத்தப்பட்ட பாகம் சமபாகமாக இல்லாமல் அவரவர் சக்திக்குத் தகுந்தவாறு கூடவும் குறையவுமாகப் பங்கேற்பட்டது. மஃரிபு தேசத்தைப் பொறுத்தவரை ஸ்பானியருக்கு ஒரு பங்கு என்றால், பிரஞ்சுக்காரருக்குப் பத்துப் பங்கு என்றவிகிதாச்சாரப்படி அத்தேசம் பங்கு வைத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது. ஆகவே, அற்ப சொற்ப காரணங்களுக்காக அவ்வல்லரசுகள் மொரோக்கோவிலுள்ள முஸ்லிம் சுல்தானுக்கு விரோதமாக யுத்தக் கப்பல்களையும் பிரங்கிப்படைகளையும் அனுப்பி பிரஞ்சுக்காரர்களுக்கும், ஸ்பானியர்களுக்கும் கீழ்ப்பட்டு அத்தேசத்தை அவர் ஆட்சிபுரியவேண்டியவாறு நிர்ப்பந்திக்கப்பட்டார். இத்தேசம் இரண்டு அரசாங்கங்களுக்கிடையில் பாகமாக இருப்பதால் பிரஞ்சுக்காரர்கள் இத்தேசத்தின் ஆட்சிமுறையை இரண்டாக வகுத்து மொரோக்கோ சுல்தான் அவர்களே நேர்முகமாக ஆட்சிபுரியும் பாகம் என்றும், சுல்தான் அவர்களின் பிரதிநிதியாகிய கலீபா என்பவர் ஆட்சிபுரியும் பாகம் என்றும் இத்தேசத்தை இரண்டாகப் பிரித்து, சுல்தானின் ஆட்சிக்குட்பட்ட பிரதேசத்தில் தங்கள் ஆதிக்கத்தையும், கலீபாவின் ஆட்சிக்குட்பட்ட பிரதேசத்தில் ஸ்பானியர்களின் ஆதிக்கத்தையும் ஏற்படுத்திக்கொண்டனர். இதற்கிடையில் தஞ்சா என்ற நகரைச் சுற்றி ஒரு பிரதேசத்தை ஏற்படுத்தி அதைச் சர்வ தேசங்களுக்கும் பொதுவான பிரதேசமாக ஏற்படுத்திக்கொண்டனர். இதனால் இப்பொதுப் பிரதேசத்தில் பிரிட்டிஷாருக்கும், இத்தாலியருக்கும் செல்வாக்கு இருந்து வருகிறது.

இவர்கள் தங்களுக்குள் இரகசிய ஒப்பந்தங்கள் செய்து நாட்டைப் பங்குபோட்டு, அத்தேச அரசரை நிர்ப்பந்தப்படுத்தித் தங்களது அதிகாரத்தை ஏற்றுக்கொள்ளும்படி செய்துகொண்டார்களாயினும், அத்தேசத்து ஜனங்களை அவர்கள் இன்னமும் தங்கள் செல்வாக்குள் உட்படுத்திக்கொள்ளவில்லை. ஆகவே, இவ்வல்லரசுகள் தங்கள் பாகத்துக்குட்பட்ட பிரதேசத்து ஜனங்களிடை செல்வாக்கை ஏற்படுத்தி அவர்களைத் தங்களுக்குக் கீழ்ப்படுத்துக்கொள்ளவேண்டிய அலுவல் அவ்வல்லரசுகளுக்குத் தனித்தனி வேலையாக அமைந்தது. அதிர்ஷ்ட வசமாக பிரஞ்சுக்காரர்களின் பாகத்துக்கு வந்த மஃரிப்தேசத்தில் அறபி வம்சத்தார் பெரும்பாலாராகவும், நவநாகரீகமும், கல்வியுமுள்ளவர்களாகவும் இருந்தமையால் இவர்களைத் தங்கள் வசப்படுத்திக் கொள்வதில் பிரஞ்சுக்காரர்களுக்கு அத்துணை சிரமமேற்படவில்லை.

ஸ்பானியரின் பாகத்துக்கு வந்த பிரதேசத்தில் பர்பரி வம்சத்தைச் சேர்ந்தவர்கள் பெரும்பான்மையினராக இருக்கிறார்கள். இவர்கள் அறபிகளைப்போல் நவ நாகரீகத்தை அறிந்துகொள்ளாமலிருந்தாலும், இயற்கையிலேயே முரட்டு சுபாவமும், யுத்தப்பிரியமும் உள்ளவர்களாக இருந்ததாலும் இவர்களை வசப்படுத்தும் காரியம் ஸ்பானியருக்குச் சிரமமாகவே இருந்தது. இவ்விதமாக ஸ்பானியருடைய பாகமாகிய ரீப் பிரதேசத்தில் ஸ்பானியர்களை ஆக்ஷேபனை செய்து அவர்களுக்கடங்காமலிருக்கும் ஒரு கூட்டம் தோன்றிவிட்டது. இக்கூட்டத்தாருக்கும் ஸ்பானியருக்கும் சுமார் 15-20 வருஷகாலமாகச் சிறு சிறு சச்சரவுகள் நடைபெற்றுக் கொண்டே இருந்தன. பிறகு மகாயுத்தம் ஆரம்பமாயிற்று. ஐரோப்பிய அரசாங்கங்களின் கவனம் முழுவதும் அந்த யுத்தத்தில் சென்றிருந்ததால் மஃரிபு தேசத்தார்மீது தொந்தரையுண்டுபண்ண இவ்வரசாங்கங்களுக்குச் சந்தர்ப்பம் வாய்க்கவில்லை. மகாயுத்தம் முடிவடைந்த தருவாயில் ரீப் தேசத்தைச் சேர்ந்த பிரபல முஸ்லிம் தலைவரான



முஹம்மதுப்னு அப்துல் கரீம் என்பவர் ஸ்பெயின் தேசத்தாருக்கு விரோதமாக யுத்தம் தொடுக்கவேண்டிய சந்தர்ப்பமேற்பட்டது. இவர் ஸ்பானிய ராணுவத்தில் சேர்ந்து உத்தியோகம் வகித்து யுத்தப்பயிற்சி பெற்று, பின்னர் ஸ்பானியர்கள்பால் கோபமடைந்து அதை விட்டு வெளியேறியவராதலால், ஸ்பானியரைத் தம்முடைய தேசத்தை விட்டு வெளியேற்றிவிடவேண்டுமென்னும் வைராக்கியங் கொண்டு, இதுவரை ஸ்பானியரை ஆக்ஷேபித்து அவர்களுடன் சிறு சிறு சச்சரவுகளைச் செய்துவந்த பர்பரிக் கூட்டத்தாருடன் சேர்ந்துகொண்டார். ஆகவே, சிறு சச்சரவாக இருந்த விவகாரம் முறைப்படியான யுத்தமாக மாறிவிட்டது.

## ஸ்பானிஷ் ரீப் யுத்தம்

இறைவன் பல நூற்றாண்டுக்கொருமுறை ஒரு நாட்டைப் புனருத்தாரணம் செய்வதற்காக விசேஷ சக்தியளித்துச் சிருஷ்டிக்கும் சில முக்கிய பெரியார்களில் காஜீ முஹம்மதுப்னு அப்துல்கரீமும் ஒருவராவர். இறைவனளித்த இவ்விசேஷத்திறமையின் மூலம் அவர் சகல யுத்தக் கருவிகளுமுள்ள ஸ்பெயின் அரசாங்கத்தை மிக வீரதீர பராக்கிரமத்துடன் எதிர்த்து யுத்தஞ்செய்து வெற்றிக்குமேல் வெற்றியடைந்து கொண்டே இருந்தார். இதனால், ரீப் பிரதேசத்திலுள்ள இச்சிறு கூட்டத்தாருக்கு அங்கு செல்வாக்கு நாளுக்கு நாள் பரவ ஆரம்பித்து, அப்பிரதேசத்தில் நூற்றுக்குத் தொண்ணூறுபேர் காஜீ முஹம்மதுப்னு அப்துல் கரீமுக்குக் கீழ்படிபவர்களாகிவிட்டனர். இவரால் ஸ்பெயினியருக்கு ஆயிரக்கணக்கான உயிர் நஷ்டமும் லக்ஷக்கணக்கான பொருள் நஷ்டமுமேற்பட்டது. இந்த யுத்தத்தால் ஸ்பெயின் தேசத்துக்குள்ளும் குழப்பமும் கிளர்ச்சியும் ஏற்பட்டுவிட்டது. ஸ்பெயின் தேசத்துப் பிரதம மந்திரியாரும் பார்லிமெண்ட் சபை அங்கத்தினரின் கூக்குரலுக்கு இசைந்து "இனி அத்தேசத்தில் யுத்தம் செய்வதன் மூலம் அதிகமான உயிர்களையும், பொருளையும் சேதப்படுத்திக் கொள்வதாக உத்தேசமில்லை" என்று அறிக்கையிட்டு விட்டார். ஆகவே, இத்தேசத்தின் சுதந்திரத்தை இதர தேசங்களும் அங்கீகரித்துக்கொள்ளும் நிலைமை ஏற்பட்டிருந்தது.

ஆனால் துர் அதிர்ஷ்டவசமாக காஜீ முஹம்மதிப்னு அப்துல்கரீமின் போர்வீரர்கள் பிரஞ்சுக்காரரின் பாகத்திலிருந்த பிரதேசத்துக் குள்ளும் பிரவேசித்து அங்கும் கலகம் உண்டாக்கிவிட்டனர். காஜீ அமீர் அப்துல் கரீமின் சைனியங்கள் ஏன் இவ்வாறு பிரவேசித்தன? என்ற விபரம் இன்னும் மர்மமாகவே இருக்கிறது. இதைப்பற்றி மொரோக்கோ வாசிகளின் அபிப்பிராயம் என்னவென்பதை நேயர்கள் அறிந்துகொள்ள வேண்டியது அவசியமாகும்.

ஸ்பானியர்களின் பாகத்தில் பிரிந்த பிரதேசத்தில் ஏற்பட்ட இந்த யுத்தத்தில் ஸ்பானியர்கள் தோல்வியுற்றால் முஸ்லிம்களுக்கு ஐரோப்பியர்கள்பால் ஏற்பட்டுள்ள மதிப்பும் பயமும் குறைந்துவிடும் ஆதலால், ஸ்பானியர்களுக்குத் தோல்வி ஏற்படாமல் காப்பது ஐரோப்பிய அரசாங்கங்கள் ஒவ்வொன்றுக்கும் இன்றியமையாத காரியமாக இருந்தது. அத்தேசத்துக்குப் பக்கத்திலுள்ள பிரதேசங்களில் பிரஞ்சுக்காரர்களின் ஆதிக்கம் இருந்து வந்ததால், ஸ்பானியர்களுக்கு அடுத்தபடியாக முஸ்லிம்களால் கஷ்டத்தை அனுபவிக்க வேண்டியவர்கள் பிரஞ்சுக்காரர்களாகவே இருந்தார்கள். ஆதலால், ஐரோப்பிய வல்லரசுகள் ஸ்பானிய—ரீப் யுத்தத்தில் பொதுவாக சிரத்தையும் கவனமும் செலுத்தி வந்தாலும், பிரஞ்சுக்காரர்கள் தங்களது அந்தஸ்தை நிலைநிறுத்திக்கொள்வதற்காக இந்த யுத்தத்தில் விசேஷ கவனம்செலுத்தி வந்தனர். எனவே அன்னோர் ஸ்பானியர்களுக்கு உதவிபுரிவதற்கும் இந்த யுத்தத்தில் சம்பந்தப்பட்டு மொரோக்கோ வாசிகளை நசுக்கவும் துடித்துக் கொண்டிருந்தனர். ஆனால், அகாரணமாக இதில் நேருக்குநேராகப் பகிரங்கமாகச் சம்பந்தப்பட்டால் உலகத்திலுள்ள ஏனைய அரசாங்கங்களின் அவமதிப்புக்கும், முஸ்லிம்களின் கோபத்துக்கும் ஆளாக வேண்டுமே என்ற எண்ணத்தால் இதில் நேர்முகமாகச் சம்பந்தப்படவில்லை. ஆயினும், அவ்வாறு தலையிடுவதற்கான ஒரு அற்பகாரணமேனும் உண்டாகமாட்டாதா என்று காத்துக்கொண்டிருந்தனர். ஆதலால், சில ஒற்றர்கள் காஜீ முஹம்மதுப்னு அப்துல் கரீமின் தளகர்த்தரிலுள்ள சிலருக்கு துராலோசனை சொல்லிக்கொடுத்தனர். அதாவது, ரீப்பிரதேசத்தை விட்டு ஸ்பானியரை விடுவித்தவுடன் பிரஞ்சுக்காரர்களின் ஆதிக்கத்தின் கீழிருக்கிற மொரோக்கோவின் இதர பாகங்களையும் பிரஞ்சுக்காரர்களை விட்டு விடுவித்துவிடுங்கள்; இதை அவசரமாகச்

செய்து முடித்துவிட வேண்டும்; மொரோக்கோவும், ரீப் பிரதேசமும் வெவ்வேறு தேசமல்ல, இரண்டும் ஒன்றுதான்; மகாயுத்தத்தில் ஜெர்மானியரால் பிரஞ்சுக்காரர்கள் அதிகம் அடிபட்டிருக்கிறார்கள். ஆதலால், அவர்கள் இப்பொழுது யுத்தம் செய்யும் நிலைமையிலில்லை; இது சமயம் சொற்ப முயற்சிசெய்தால் அப்பிரதேசத்தையும் விடுவித்துக் கொள்ளலாம்; கால தாமத மேற்பட்டால் பிரஞ்சுக்காரர்களிடமிருந்து அப் பிரதேசத்தை விடுவிக்க முடியாது; பிரஞ்சுக்காரர்களால் உங்களது சுயேச்சைக்கும் ஆபத்து நேரிடக்கூடும் என்று துர்ப்புத்தி போதித்தனர்.

ஆகவே, காஜீ முஹம்மதுப்னு அப்துல் கரீமின் திருப்தியும் அனுமதியுமின்றியே பிரஞ்சுக்காரர்களுக்குச் சொந்தமான பகுதியில் ரீப் முஸ்லிம்கள் பிரவேசித்து அங்குள்ள கபீலாக்களையும் தூண்டிவிட்டுக் கலகம் செய்தனர். யுத்தம் செய்யக் காத்துக்கொண்டிருந்த பிரான்சுக்கு இது நல்லதருணமாயிற்று. உடனே உணவுப்பொருள்கள், யுத்தக்கருவிகள் முதலியன ரீப் முஸ்லிம்களுக்குக் கிடைக்காவண்ணம் தடை செய்துவிட்டு நான்கு புறமுமாக யுத்தம் தொடுத்தனர். ஒருவருக்கு எவ்வளவு தான் பராக்கிரமமும், திறமையுமிருந்தாலும் பட்டினியும் பசியுமாக எத்தனை நாள் தானிருக்கமுடியும்? ஆகவே, இறுதியாக காஜீ முஹம்மதுப்னு அப்துல் கரீம் பிரஞ்சுக்காரர்களிடம் சரணமடையவேண்டிய தேற்பட்டது.

## பிரஞ்சுக்காரர்களின் பிரித்தாளும் தந்திரம்

இந்தயுத்தத்துக்குப் பிறகு ஸ்பெயினும் பிரான்சும் கூடியவரை மொரோக்கோ தேசத்தில் ஆட்சிபுரியும்விஷயத்தில் ஒரு ஐக்கியத்தின்படி நடந்துகொள்ளவேண்டும் என்று உடன்படிக்கை செய்து கொண்டிருக்கின்றன. இனிமேல் இந்நாட்டில் இம்மாதிரியாக குழப்பம் உண்டாகுவதற்கு இடமேற் படக் கூடாதென்பது இவ்வுடன்படிக்கையின் நோக்கம். இத்தேசத்திலுள்ளவர்கள் மதம், பாஷை முதலிய சகல விஷயத்திலும் ஒன்றுக இருப்பதால் இவர்களைப் பிரித்தாளுவதற்கான உபாயம் என்னவென்பதைக் கண்டுபிடித்து "பர்பரி" பிரசினையைப் புதிதாக உண்டாக்கி இருக்கிறார்கள். இப்பிரசினையைப் புகலாகக் கொண்டு அடியிற் கண்டவாறு பொதுஜனங்களிடம் பிரசாரம் நடைபெறுகிறது.

1. அறபிகள் உங்கள் தேசத்துக்கு வந்து குடியேறியவர்கள்; உங்களுக்கு அந்நியர்கள்; உங்களுடைய ஆயிரக்கணக்கான சகோதரர்களின் ரத்தத்தைச் சிந்தி இத்தேசத்தில் தங்களது ஆதிக்கத்தை ஏற்படுத்திக்கொண்டிருக்கிறார்கள். ஆகவே, நீங்கள் அறபி வம்சத்தாருக்கு அடங்கி இருக்கக்கூடாது. நீங்கள் உலகிலுள்ள வீரச்சமுகத்தினர். அறபிகள் உங்களை அற்பமாக மதிக்கிறார்கள். இந்நிலைமையில் நீங்கள் அவர்களை நேசிக்கிறீர்களா?

2. உங்களது தாய்பாஷை பர்பரி. அறபிப் பாஷை அந்நிய தேசப்பாஷை. அந்தப் பாஷையில் உங்களுக்கு என்ன சிரத்தை? கௌரவம், சுயமதிப்பு, தன்னம்பிக்கை ஆகிய விஷயங்களைக் கவனித்தாலும் நீங்கள் உங்களது தாய் பாஷையை அபிவிருத்திசெய்ய வேண்டியதிருக்கிறது. ஆகவே அறபிப் பாஷையுடன் சம்பந்தம் வைத்துக்கொள்ளாதீர்கள். தற்போது இக்காலத்திலுள்ள அவசியத்தைக் கவனிக்கின் நீங்கள் நாகரீகமடைந்த ஒரு பாஷையைக் கற்றுக்கொள்வது அவசியமாக இருக்கிறது. ஆதலால், நீங்கள் பிரஞ்சு அல்லது ஸ்பானிய பாஷைகளைக் கற்றுக்கொள்ளலாம். அறபிப் பாஷை உங்கள் உணர்ச்சியை அடிமைப்படுத்தியதற்கு அதிகுறியான பாஷையாகும். இனியும் நீங்கள் பர்பரி பாஷையைப் பார்க்கினும் அறபிப் பாஷையைச் சிலாக்கியமெனக் கொள்கிறீர்களோ?

3. நீங்கள் பர்பரி வகுப்பினர். உங்களுக்குத் தனிப்பழக்க வழக்க மிருக்கிறது. உங்கள் நாட்டுக்கு அந்நியர்களான அறபிகளின் பழக்கமும் வழக்கமும் வேறு. அவர்களது பழக்க வழக்கம் உங்களுக்கு எவ்வாறு பொருத்தமாக இருக்கும்? உங்களுடைய பர்பரிச் சட்டங்களையும் வழக்கங்களையும் நீங்கள் புதுப்பித்து அதைக் காப்பாற்றுங்கள்.

## அறபிப் பாஷைக்கு அனுதரவு

இவ்வபிப்பிராயத்தை மக்களிடம் கட்டுப்பாடாகப் பிரசாரம் செய்யப்படுகிறது. அத்துடன் அறபிப் பாஷைக்கிருக்கிற செல்வாக்கைக் குறைப்பதற்காக வேறு பலகாரியங்களும் செய்யப்படுகின்றன.

1. பர்பரி ஜனங்கள் வாழும் பிரதேசங்களிலுள்ள அரசாங்கப் பாடசாலைகளில் அறபிப் பாஷை போதிக்கப்படுவதில்லை. பர்பரிபாஷையும், பிரஞ்சுப் பாஷையும் போதிக்கப்படுகின்றன.



2. தேசியப் பள்ளிக்கூடங்களில் திருகுர்ஆன் போதிக்கப்படுகிறது. திருகுர்ஆனின் மூலம் அறபிப் பாஷையை அபிவிருத்திசெய்வதற்கான பிரசாரம் நடைபெறுவதால் தேசியப் பள்ளிக்கூடங்களெல்லாம் அரசாங்க உத்திரவுப்படி நிறுத்தப்பட்டு விட்டன.

3. சிவில் கிரிமினல் விஷயங்களுக்காக பிரஞ்சுச்சட்டங்கள் அமலிலிருக்கின்றன. இனி ஆசாரங்களை நடாத்துவதற்காக அதாவது விவாகம், பாகப்பிரிவினை ஆகியவைகளைக் கவனிப்பதற்காக பெரிய கிராமங்களிலும், பெரிய கபீலாக்களிலும் காஜிமார்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். இவர்கள் இஸ்லாமிய ஷரீஅத்தின்படி இவ்விவகாரங்களில் முடிவு செய்கின்றனர். அத்துடன் காஜிமார்களின் கோர்ட்டுக்குச் செல்வதற்குப் பதிலாக இதர சிவில் கோர்ட்டுகளுக்குப் போகவிரும்புவோர் பிரஞ்சுக் காரர்களின் சிவில் சட்டப்படியும் விவகாரங்களைத் தீர்த்துக்கொள்ள வசதி ஏற்படுத்திக் கொடுக்கப்பட்டிருக்கிறது. தவிரவும், காஜிமார்களது கோர்ட்டு மிகக்குறைவாகவும், பிரஞ்சு சிவில் கோர்ட்டுகள் மிக அதிகமாகவுமிருக்கின்றன. ஒரு காஜியார் ஸ்தானம் காலியாகிவிட்டால் அப்புறம் அந்த ஸ்தானத்துக்குப் புதிய காஜியை நியமிப்பதில்லை. இதனால், காஜிகளின் கோர்ட்டுகள் வரவரக் குறைந்து வருகின்றன. ஜனங்கள் தங்களது விவகாரங்களைத் தீர்த்துக்கொள்ள காஜிகோர்ட்டுக்குச் செல்ல அதிகச் சிரமமேற்பட்டு வருகிறதுடன் பிரஞ்சுச் சட்டப்படி வியவகாரங்களை முடிவுசெய்து கொள்ள அதிக வசதிகளுமிருக்கின்றன.

4. இவ் விஷயத்தைப்பற்றி முறையீடு செய்து கொள்வதற்காக மொரோக்கோ சுல்தான் அவர்களைப் பேட்டிகண்டு பேசவும், அவரிடம் தூது செல்லவும் ஏற்பாடு செய்தால் ராஜீய குற்றம் செய்வதாகப் புகல்கூறி அத்தூதுவக் கூட்டத்து அங்கத்தினர்கள் சிறைக்கூடத்துக்கு அனுப்பப்பட்டு விடுகிறார்கள்.

5. பத்திரிகைகளுக்கும் சஞ்சிகைகளுக்கும் அதிகக் கட்டுத்திட்ட மேற்படுத்தப்பட்டிருக்கிறது. அற்பசொற்ப காரணங்களுக்காக அவைகள் நிறுத்தி விடப்படுகின்றன. மோரோக்கோவிலுள்ள ஸ்பானிய பிரஞ்சுப் பகுதிகள் மோரோக்கோ சுல்தான் ஒருவருடைய ஆட்சியின் கீழ்தானுள்ளன. இத்தேசத்து ஜனங்கள் ஒரே வகுப்பினராகவு மிருக்கின்றனர். அவ்வாறிருந்தும், அவர்களுக்கிடையில் பிரிவினையை வளர்ப்பதற்காக ஸ்பானியப் பகுதியிலுள்ள பத்திரிகை பிரஞ்சுப்பகுதிக்கும், பிரஞ்சுப்பகுதியிலுள்ள பத்திரிகை ஸ்பானியபகுதிக்கும் செல்லக்கூடாது என்று தடுக்கப்பட்டிருக்கின்றன. மேலும் ஒரு பகுதியிலுள்ள ஜனங்கள் இன்னொரு பகுதியில் பிரயாணம் செய்யக் கூடாது என்றும் சட்டமியற்றி இருக்கிறார்கள்.

## தேசிய இயக்கம்

இத்தேசத்தைப்பற்றி அறிவிக்கும் செய்திகள் பத்திரிகைகளில் அதிகமில்லாததாலும், உண்மைச் சமாச்சாரங்கள் வெளியாகுவதற்கான வசதிகள் மிகக்குறைவாக இருப்பதாலும் இப்பிரதேசத்தில் அமைதியும் சமாதானமுமிருப்பதாகவும், இத்தேசத்தார் பிரஞ்சு ஸ்பானிய ஆதிக்கத்தை ஏற்றுக்கொண்டதாகவும் வெளியுலகத்தார் கருத இடமிருக்கிறது. ஆனால், இன்னமும் இப்பிரதேசத்தின் சில இடங்களில் இவ்வரசாங்கத்துக்குப் பகிரங்க எதிர்ப்பும் இருந்து கொண்டிருக்கிறது. இங்கு ஒரு கூட்டத்தார் ஐரோப்பியரைப் பெரிதென மதித்து அவர்களுக்கு அடங்கிப் போவதுதான் நல்லது என்று மதிக்கிறார்கள். ஆனால், இங்குள்ள வாலிபர்கள் இம்மாதிரி ஐரோப்பியரை மேலாகக் கருதுவதே தங்களை அற்பமாக மதித்துக் கொள்வதாக இருக்கிறது என்றும், கீழ்நாட்டினர் பலர் மேனாட்டினரைத் தோற்கடித்திருக்கின்றனர் என்றும் கூறித் தங்கள் தேசத்தில் தேசிய இயக்கத்தை வளர்த்து வருகிறார்கள்.

இதர முஸ்லிம் தேசங்களின் சமாச்சாரங்களைத் தெரிந்து கொள்ளவும், அத்தேசத்தாருடன் நட்புக்கொள்ளவும் மொரோக்கோ முஸ்லிம்கள் அதிக ஆர்வங்கொள்கின்றார்கள். இங்கு "அஸ்ஸலாம்" என்று ஒரு பத்திரிகை வெளியாகின்றது. இதில் இந்தியா, எகிப்து முதலிய நாட்டுச் செய்திகள் அதிகம் பிரசுரிக்கப்படுகின்றன. அலீகார் சர்வகலாசாலையில் ஆசிரியராக இருந்த இஹ்ஸான் ஸாமி ஹக்கீ என்பவர் இந்தியாவின் நிலைமையையும், இந்தியாவின் மதங்களையும்பற்றியும் எழுதும் வியாசங்கள் இப்பத்திரிகையில் அதிகம் பிரசுரமாகின்றன.

# பாலைவனக் கிழவியின் பெருந்தன்மை

முஸ்லிம்கள் எவ்வாறிருந்தனர்? அவர்கள் எவ்வாறிருக்க வேண்டும்? அவர்களது அந்தஸ்தென்ன? இஸ்லாத்தின் உரிமை, இஸ்லாத்தின் அந்தஸ்து முதலியவைகள் யாது? என்னும் பல கேள்விகளுக்கு நாம் ஒரு அன்ஸாரிக் கிழவியின் அருங்குண விசேஷத்தைக் கூறுவதன் மூலம் பதிலளிக்க விரும்புகிறோம். இக்கதை வெரும் கட்டுக்கதையல்லாது ஸஹாபிகளின் காலத்தில் பிரத்தியக்ஷமாக நடைபெற்ற ஒரு காரியமாகும். இக்காரியத்திலிருந்து நம்மவர் கற்றுக்கொள்ளவேண்டிய அநேகம் பாடங்களுண்டு. ஆதலின், வாசகநேயர்கள் இதைக் கதையென்று கருதி, விட்டு விடாமல் இதிலுள்ள விசேஷ அம்சத்தைத் தங்களிடமும் உற்பத்தி செய்துகொள்ள முயல்வார்களாக.

ஹஜ்றத் அப்துல்லாஹிப்னு அப்பாஸ் (ரலி.) அவர்கள் திமிஷ்கு நகரிலிருந்து ஸபர் புறப்பட்டார்கள். இடையில் ஒரு தங்குமிடத்தில் (மன்ஜிலில்) தாமதிக்கவேண்டிய சந்தர்ப்பம் ஏற்பட்டது. அந்த இடத்தில் உணவுக்கு வேண்டிய வசதிகளெதுவும் இருக்கவில்லையாதலால் தம்முடன் வந்தவர்களில் ஒருவரிடம் "நீங்கள், இந்தப் பாலைவனத்தில் எவரேனும் இடையர்கள் அகப்படுகிறார்களா வென்று பார்த்து யாரேனும் அகப்பட்டால் அவர்களிடம் சாப்பாடு வாங்கி வாருங்கள்" என்று கூறி அனுப்பினார்கள்.

ஹஜ்றத் இப்னுப் அப்பாஸ் (ரலி.) அவர்களின் பிரதிநிதியான அத்துணைவர் இரு வேலைக்காரர்களைத் தம்முடன் அழைத்துக் கொண்டு அவ்வனாந்தரத்தின் பலஇடங்களிலும் சுற்றிப்பார்த்துஎவரேனும் மனுஷர் அகப்படமாட்டார்களா என்று கவனித்தார். அவ்வனாந்தரமெங்கும் மனித சஞ்சார மிருப்பதாகவே தோன்றவில்லை யாதலால், உணவுப் பதார்த்த மெதுவும் அகப்படுவதற்கு எவ்வித வழியுமில்லையே என்ற ஏக்கங்கொண்டு திரும்பும் சமயத்தில், வெகுதூரத்தில் ஒரு குடிசை தென்பட்டது. உடனே இம் மூவரும் அக்குடிசையின் அண்டையில் சென்று பார்க்கும்போது அங்கு ஒரு வயோதிக ஸ்திரீ இருப்பதைக் கண்டு அவரிடம் சென்று "அம்மா! நாங்கள் பரதேசிகள்; தங்களிடம் உணவுப் பதார்த்த மேதேனு மிருக்கிறதா?" என்று வேண்டினர்.

அவ்வயோதிக ஸ்திரீ "இல்லை! விற்பனை செய்வதற்கான உணவுப் பதார்த்தம் என்னிடமில்லை. ஆனல், எனக்கும் என் மக்களுக்குமாக என்னிடம் சொற்ப உணவு இருப்பது மெய்" என்று கூறினள்.

அதற்கு அவர்கள் "உமது மக்கள் எங்கே இருக்கிறார்கள்" என்று வினவினர்.

அவ்வயோதிகஸ்திரீ:—"அவர்கள் எனது கால்நடைகளை மேய்ப்பதற்காகச் சென்றிருக்கின்றனர். இது அவர்கள் வரும் சமயம்தான், வந்து விடுவார்கள்" என்றனள்.

அம்மூவரும்:—"அவர்களுக்கென நீங்கள் என்ன உணவு சித்தம்செய்து வைத்திருக்கிறீர்கள்?" என்று வினவினர்.

வயோதிக ஸ்திரீ:—"ஒரு ரொட்டி வைத்திருக்கின்றேன்" என்றனள்.

அம்மூவரும்:—அதில் பாதியை எங்களுக்குத் தரமாட்டீர்களா?"

வயோதிக ஸ்திரீ:—இல்லை! முழு ரொட்டியையும் வாங்கிக் கொள்ளுங்கள்.

அம்மூவரும்:—பாதி ஏன் கொடுக்கக்கூடாது, முழுவதையும் கொடுக்கச் சம்மதிப்பதற்கு என்ன காரணம்? அன்றியும் தங்களிடம் இதைத் தவிர வேறு ரொட்டி இல்லையே."

வயோதிக ஸ்திரீ:—பாதி கொடுப்பதால் என் அந்தஸ்துக் குறைகிறது. முழுவதையும் கொடுப்பதால் என் அந்தஸ்து அதிகப்படுகிறது. ஆதலின் நான் குறைவான வேலை ஏன் செய்யவேண்டும்? அதிகப்படுகிற வேலையை நான் செய்யக் கூடாதா?" என்றனள்.

இவர்களுக்கு உணவு மிகவும் அவசியமாக இருந்ததால், அந்த முழுரொட்டியையும் வாங்கிக்கொண்டு ஹஜ்றத் அப்துல்லா ஹிப்னு அப்பாஸ் (றலி.) அவர்களிடம் வந்து ரொட்டியை



யும் கொடுத்து நடந்த செய்திகளனைத்தையும் சரிவரக் கூறினர்கள். இதைக் கேட்டதும் ஹஜ்றத் அவர்கள் அம்மூவரையும் நோக்கி "இப்பொழுதே அவ்வயோதிக ஸ்திரீயின் குடிசைக்குத் திரும்பச் சென்று அக்கிழவியை என்னிடம் அழைத்து வாருங்கள்" என்று கட்டளையிட்டார்கள். இம்மூவரும் மறுபடியும் அக்குடிசைக்குவந்து "அம்மா! எங்கள் எஜமானர் உங்களை அழைக்கிறார்" என்றனர்.

வயோதிக ஸ்திரீ:—உங்கள் எஜமானர் யார்?

அம்மூவரும்:—அப்துல்லா ஹிப்னு அப்பாஸ் (றலி.) அவர்கள் எங்கள் எஜமானர்.

அவ்வயோதிகஸ்திரீ:—இந்தப் பெயரைநான் கேள்விப்பட்டதில்லையே.

அம்மூவரும்:— அப்துல் முத்தலிபுடைய பிள்ளை அப்பாஸ் (ரலி.) அவர்களின் புதல்வர்; நபிகள் நாயகம் (ஸல்.) அவர்களின் சிறிய தந்தையின் மகனர்.

வயோதிக ஸ்திரீ:—அல்லாஹு தஆலாவின் மீது பிரமாணமாக, இது மிகப் பெரும் பாக்கியம். என்னுடைய இனத்தார் இவர்களுக்கு அன்ஸாரிகளாவார்கள்.

அம்மூவரும்:—மெய்தான்.

வயோதிக ஸ்திரீ:—அவருக்கு என்னிடத்தில் என்னவேலை?

அம்மூவரும்:—உமது பெருந்தன்மையான நடத்தைக்காக உமக்குப் பரிசளிக்க விரும்புகிறார்.

வயோதிக ஸ்திரீ:—இறைவன் மீதாணையாக நான் செய்த காரியம் உங்களுக்கு உபகாரமாகத் தோன்றுமாயின்.........அதற்காக நான் எவ்விதப் பிரதி பிரயோஜனத்தையும் வாங்கிக் கொள்ளமாட்டேன். இவ்வித உதவி செய்வது மனிதராகப் பிறந்தவர்கள் கடமையாகும்.

அம்மூவரும்:— எங்கள்எஜமானர் உங்களைப் பார்க்கவும் உங்களிடம் சம்பாஷிக்கவும் விரும்புகிறார்.

வயோதிக ஸ்திரீ:—வருகிறேன். யானும் நபிகள் நாயகம் (ஸல்.) அவர்களது பந்துவான இம்மாதிரி பெரியார்களைப் பார்க்க இஷ்டப்படுகிறேன்.

பின்னர், அவ்வயோதிக ஸ்திரீ அம்மூவருடனும் ஹஜ்ரத் அப்துல்லா ஹிப்னு அப்பாஸ் (ரலி.) அவர்கள் இருக்குமிடம் வந்தார்கள். ஹஜ்ரத் அப்துல்லா ஹிப்னு அப்பாஸ் (ரலி.) அவர்கள் அவ்வயோதிக ஸ்திரீயை வரவேற்று உங்களது வரவு சந்தோஷகரமானதாக இருக்கட்டும். நீங்கள் சௌக்கியமாக இருக்கிறீர்களா என்று உபசார வார்த்தைகளால் அவர்களது க்ஷேமலாபத்தை விசாரித்தார்கள்.

அவ்வயோதிக ஸ்திரீ:—இவ்வுலகில் எனக்குக் கிடைக்கப்பெருத எந்தச் சந்தோஷமும் இனிஎஞ்சி இருக்கவில்லை. ஆனல், நான் இப்பொழுது கிடைத்ததைக் கொண்டு திருப்தியடையும் நிலைமையில் இருக்கிறேன்; பந்துக்களைப் பரிபாலித்து வருகிறேன்; அந்தியிலும் சந்தியிலும் ஆண்டவனை அடையவேண்டுமென்ற ஆவலுடன் மரணத்தை எதிர்பார்த்த வண்ணமிருந்து வருகிறேன்.

ஹஜ்ரத் இப்னு அப்பாஸ் (ரலி.) அவர்கள்.—இரக்கமுள்ள தாயே! தாங்கள் ரொட்டி முழுவதையும் எங்களுக்குக் கொடுத்துவிட்டீர்கள். உங்களது புதல்வர்கள் கால்நடைகளை மேய்த்துக் களைப்புடனும் பசியுடனும் உங்களிடம் திரும்பவரும்போது அவர்களின் பசியைத் தணிப்பதற்கு நீங்கள் என்ன வைத்திருக்கிறீர்கள்?

அவ்வயோதிக ஸ்திரீ:—"யானே இரவு பகலாகப் பட்டினியாயிருந்து வருகிறேன். எவரேனும் பெரியார்கள் வந்தால் அவர்களுக்கு உணவளித்துவிட்டு என் மக்களுக்குப் பெருந்தன்மை என்ற அந்தஸ்தை அளிக்கவேண்டுமென்றிருக்கிறேன்" என்ற கருத்தமைந்த ஒரு செய்யுளைக் கூறினள்.

ஹஜ்ரத் இப்னு அப்பாஸ்(ரலி.) அவர்களுக்கு அவ்வயோதிக ஸ்திரீ கூறிய வாக்கியங்கள் சந்தோஷத்தையளித்தன. உடனே தமது வேலைக்காரரைநோக்கி "நீங்கள் இவரது குடிசைக்குச் சென்று, இவரது புதல்வர்களை அழைத்து வாருங்கள்" என்று கட்டளையிட்டார்கள். அவ்வயோதிகஸ்திரீயும் தமது மக்களின் அங்க அடையாளங்களைக் கூறினள். அவ்வேலைக்காரர்கள் அக்குடிசைக்குச்சென்று அவ்வயோதிக ஸ்திரீயின் மக்களைக்கண்டு அவர்களின் தாயார் அறிவித்த செய்தியைக் கூறி ஹஜ்ரத் அப்துல்லா ஹிப்னு 'அப்பாஸ். (ரலி.) அவர்களிருக்குமிடத்துக்கு வரும்படி அழைத்தார்கள். மேய்ப்பாளர்களான அம்மூவரும் ஹஜ்றத்

இப்னு அப்பாஸ் (ரலி.) அவர்களின் ஏவலாளருடன் ஹஜ்ரத் அவர்களைப் பார்ப்பதற்காக வந்தார்கள்.

ஹஜ்றத் இப்னு அப்பாஸ் (ரலி.) அவர்கள் அம்மூவரையும் வரவேற்று உபசரித்து "உங்களுக்கு ஏதேனும் ஒருகாரியம் செய்யவேண்டும்: உங்களுக்கு நான் விரும்புகிற உபகாரத்தைச் செய்யவேண்டும் என்பதற்காகவே யான் உங்களையும், உங்கள் மாதாவையும் என்னிடம் அழைத்தேன்" என்று கூறினார்கள்.

அதற்கு அம்மேய்ப்பர்கள் "இவ்வாறு ஒருவருடைய காரியத்துக்கு மற்றவர் உதவுவதானது, உபகாரம் செய்யும்படி ஒருவரை ஒருவர் கேட்டுக்கொண்டால்தான் ஒருவருக்கு மற்றவர் உபகாரம் செய்வது வழக்கம். அல்லது ஒருவருக்கு ஒருகாரியத்தில் உதவி செய்திருந்தால் அதற்குப் பிரதிபலனை மற்றவர் உபகாரம் செய்யும் வழக்கமுண்டு. அவ்வாறான உதவி எதையும் நாங்கள் உங்களுக்குச் செய்துவிடவில்லை. தாங்களே முதலில் எங்களுக்கு உபகாரம் செய்யவிரும்புகிறீர்கள். இது உங்களது உதாரகுணமாகும். இதற்காக நாங்கள் நன்றி செலுத்துகிறோம்" என்று பதில் கூறினர்.

ஹஜ்ரத் அப்துல்லா ஹிப்னு அப்பாஸ் (ரலி.) அவர்கள் 'வஹ்ரத்தில் வாசஞ் செய்யும் அந்நால்வருக்கும் 7 ஆயிரம் வெள்ளிக்காசுகளையும் பத்து ஒட்டகைகளையும் நன்கொடையாக அளித்தார்கள். அப்பொழுது, அவ்வயோதிக ஸ்திரீ தமது மைந்தர்களை நோக்கி "மக்காள்! நீங்கள் ஒவ்வொருவரும் ஆளுக்கொரு கவி கூறுங்கள்" என்று கட்டளையிட்டனள். அவர்கள் மூவரும் முறையே பின்வரும் கருத்துகளமைந்த மூன்று கவிகளைக் கூறினர்.

மூத்தவர்:—உங்களுடைய சொல் உண்மை என்பதையும், உங்களது கிரியை உண்மையை அஸ்திபாரமாகக் கொண்டதென்பதையும், நீங்கள் நல்லெண்ணமே கொண்டவர்களென்பதையும் பற்றி நான் உங்களுக்கு சாட்சியங் கூறுகிறேன்.

இரண்டாமவர்:—கேட்பதற்கு முன் கொடையளித்தல் பெருந்தர்மமும், உயரிய செய்கையுமாகும்.

மூன்றுமவர்:—மக்களுக்குத் தலைவராகவும், அவர்களுக்காக முன்னுக்கு நிற்பவர்களாகவுமுள்ள பெரியார்கள்தான் இப்படிப்பட்ட காரியங்களைச் செய்கிறார்கள்.

கடைசியாக அவ்வயோதிக ஸ்திரீ:—தர்மகுணம் படைத்த பெரியோய்! தாங்கள் நீடூழி வாழ்வீராக! தாங்கள் க்ஷேமமாக இருப்பீராக!! உமக்கு துன்பம் நெருங்காதிருக்கட்டும்!!! என்ற கருத்துகளைச் செய்யுளாகக் கூறினள்.

பின்னர், ஹஜ்றத் அப்துல்லா ஹிப்னு அப்பாஸ் (ரலி.) அவர்கள் அந்நால்வரையும் அனுப்பிவிட்டார்கள். இது நமது முன்னோர்களின் தன்மையாக இருந்தது. இதுதான் உண்மை முஸ்லிம்களின் லக்ஷணம். நம்மில் இந்த இலக்ஷணங்கள் அமைந்திருக்கும் வரை நாம் உலகத் தலைவர்களாயிருந்தோம். நம்மில் இந்த இலக்ஷணங்கள் இப்போது வெகுவாகக் குறைந்துவிட்டன. நம்முடைய தலைமைப் பதவி நீங்கி நாம் பிறரை நமக்குத் தலைவராக ஏற்படுத்திக்கொள்ள வேண்டியதாக இருக்கிறது. ஆகவே மேலே கூறிய இந்நிகழ்ச்சிகளிலிருந்து நாம் கற்றுக்கொள்ள வேண்டிய பாடங்களனந்தமுண்டு. இதை செந்நாப்புலவர் "என்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம், உய்வில்லை செய்நன்றி கொன்ற மகர்க்கு" என்ற குறளால் விளக்கியுள்ளார். இப்படிப்பட்ட தன்மை நம் அனைவரிடத்திலும் அடியுடன் இல்லை என்று கூறுவதாக எவரும் வருந்தற்க. நம்மிற் பலரிடம் இத்தன்மை அடியுடன் இல்லை என்னலாம். சிலரிடம் இத்தன்மை ஓரளவு இருக்கத்தான் செய்கிறது. ஆகவே, இத்தன்மை நம் யாவரிடமும் பூரணமாக இருக்கவேண்டுமென்பது தான் நமது பேரவாவாகும். இறைவன் நம்மவருக்கு அந்த முதற் காலத்தவரின் தன்மைகளும் நடக்கைகளும் உண்டாக்குவதற்காக 'தௌபீக்' செய்தருள்வானாக. ஆமீன்.

---

## சிங்கை சந்தா நேயர்கட்கு!

அன்புடைய அபிமானிகள் தங்கள் சந்தா பாக்கிகளையும், நிகழ்பெறும் ஆண்டுக்குள்ள சந்தாவையும் அவ்விடத்திய நமது ஏஜண்டு ஜனப் மு. முஹம்மது ஷரீப் (439 A நார்த்பிரிட்ஜ் ரோடு) அவர்களிடம் செலுத்திவிடுமாறு வேண்டுகிறோம்.

# ஷஹீத் அன்வர்பாஷாவின் அரிய தொண்டுகள்

(ஜமால் பாஷாவின் ஞாபகக் குறிப்பு)

(சென்ற மாதத்தொடர்.)

சலோனிக்காவிலுள்ள பல்கேரியப் படைகளையும் கிரேக்கப்படைகளையும் அடக்குவதற்காக காஜீஅன்வர்பாஷா அவர்களை சுல்தான் அப்துல் ஹமீதுகான் (மர்ஹூம்) அவர்கள் நியமித்தார்கள். அன்பர் பாஷாவின் வீரப்பிரதாபங்களும் ரூபலாவண்யமும் அக்காலத்திலேயே நாடெங்கும் பரவி இருந்தது. கலகக்காரர்களின் கூட்டத்தை அவர்பின் றொடர்ந்து செல்வாராயின் அக்கூட்டத்தாரின் ஆணிவேரைப் பிடுங்கி எரியும்வரை திரும்பிவரமாட்டார். காடுகளிலும், வனந்திரங்களிலும், இருண்ட நிசிகளிலும், மலைகளிலும், மடுக்களிலும் கொஞ்சமும் அஞ்சாமல் கலகக்காரர்களைத் தன்னந்தனியாகப் பின்றொடர்ந்து செல்வார். தம்முடைய சொந்தச் சௌகரியங்களைக் கவனித்துக்கொள்ளவும் மாட்டார். தம்முடைய ஜீவியத்தை லக்ஷியம் செய்யவும் மாட்டார்.

கலகக்காரர்களனைவரும் அன்வர்பாஷாவின் பெயரைக்கேட்ட மாத்திரத்தில் நடுங்குவார்கள்; இன்றுவரை இவ்வளவு சுறுசுறுப்பும் முயற்சியுமுள்ள எந்தத் துருக்கியினிடமும் போர் செய்ய வேண்டிய சந்தர்ப்பம் வாய்க்கவில்லை என்று கூறுவர். ஆகவே, அன்வர்பாஷா கலகக்காரர்களைப் பிடித்துக் கலகத்தை அடக்குவதற்கென்று ஒரு ஊருக்குச் செல்வாராயின், கலகக்காரர்கள் அந்தப் பிரதேசத்தையே காலிசெய்துவிட்டு ஓடிவிடுவர். அங்கு அமைதியும் சமாதானமும் ஏற்பட்டுவிடும்.

பல்கேரியப் பட்டாளத்து ஜாக்கோப் என்ற ஆபீஸர் ஒருவர் துருக்கியர்களை அதிகம் இம்சித்து வந்தார். அவன் துருக்கியர்களைத் தமது நாட்டைவிட்டு வெளியேற்றாமல் விடுவதில்லை என்று பிரமாணமும் செய்திருந்தான். இப்பல்கேரிய ராணுவ ஆபீஸர் அதிக பலம் பொருந்தியவன். இவனால் முஸ்லிம்கள் வாழும் பிரதேசங்கள் கியாமத்து நாள் வந்துவிட்டதா என்று கலக்கமுற்றிருந்தது. இவன் குழந்தைகளையும் கூடக்கொன்று விடுவான். ஸ்திரீகளைக் கற்பழித்து விடுவான். எனவே, துருக்கி அரசாங்கம் இவனால் சங்கடத்துக் குட்படுத்தப்பட்டிருந்தது. ஆகவேஇவனைப் பிடித்து அடக்குவதற்காகஅநேகம் முறை பட்டாளங்கள் அனுப்பப்பட்டன ஆனால் இவன் அகப்படவே இல்லை.

ஒருநாள் அன்வர்பாஷா ஒரு கிராமத்தில் பல்கேரிய நிலச்சுவான்தார் ஒருவர் வீட்டில் உட்கார்ந்துகொண்டிருந்தார். அந்த பல்கேரிய நிலச்சுவான்தார் துருக்கி அரசாங்கத்தின் மீது அதிகபற்றும் அபிமானமுமுள்ளவரென்றும், ஜாக்கோப் முதலிய கலகக்காரர்களை அதிகம் வெறுப்பதாகவும் அன்வர்பாஷாவிடம் கூறி இருந்தார். அன்வர்பாஷா அவருடைய கட்டிலில் சாய்ந்துகொண்டிருந்தபோது தம்முடைய துப்பாக்கியைத் தமது படுக்கைக்குக் கீழில் வைத்திருந்தார். அவ்வீட்டுக்குச் சொந்தக்காரரான பல்கேரிய நிலச்சுவான்தாரின் எட்டு வயதுப்புதல்வன் தம்முடைய துப்பாக்கியைக் கூர்ந்து பார்த்துக்கொண்டிருப்பதை அன்வர்பாஷா உணர்ந்துகொண்டார்.

உடனே, அன்வர்பாஷா அப்பையனுடன் பேசத் தொடங்கினர். ஆரம்பத்தில் வேறு பல பேச்சுக்களை அப்பையனிடம் பேசி, அவனைச் சிநேகம் செய்துகொண்டு தம்முடைய அசல் பேச்சை ஆரம்பித்து "இதோ பார்? என்னுடைய துப்பாக்கி எவ்வளவு நல்லதாக இருக்கிறது; ஜாக்கோபுக்கு இம்மாதிரி துப்பாக்கி எங்கிருந்து கிடைக்கப் போகிறது?" என்று கூறினர்.

பையன், தன்னுடைய பெற்றோர்கள் ஜாக்கோபைப் பற்றிப் புகழ்ந்து பேசிக் கொள்வதை இதற்கு முன் கேட்டிருந்தபடியால், "ஜாக்கோபுடைய துப்பாக்கி இதைப் பார்க்கினும் ரொம்ப நல்ல துப்பாக்கி" என்று கூறினன்.

அன்வர் பாஷா விஷயத்தை உணர்ந்து கொண்டார். தமது நோக்கம் சித்தியாவதற்கான காலம் வந்துவிட்டது என்பதை உணர்ந்து

கொண்டு அப்பையனுடன் சம்பாஷணை செய்யவும் தர்க்கம் செய்யவும் ஆரம்பித்துப் பையனுக்கு ரோஷம் வரும்படிச் செய்தார். பையனுக்குக் கோபமும் ஆத்திரமும் உண்டாயிற்று. அன்வர் பாஷா சிரித்துக்கொண்டு "ஜாக்கோப் துப்பாக்கி இதைப்பார்க்கினும் நல்லதாக இருந்தால் அதை எடுத்துக்கொண்டு வந்து இந்தத் துப்பாக்கியுடன் ஒப்பிட்டுப் பார்த்து யாருடைய துப்பாக்கி நன்றாக இருக்கிறது என்பதைக் காண்பி. அப்பொழுது நாங்களும் அறிந்துத் தெரிந்து சொல்கிறோம்" என்று கூறினார்.

பையன் உடனே எழுந்து, தலைவா! சல்வரை வந்தான். உடனே, திடீரென நின்றுவிட்டான். அதுபொழுது ஜாக்கோபை துருக்கியர்கள் தேடிக்கொண்டிருக்கின்றனர் என்பது அவனுடைய ஞாபகத்தில் வந்துவிட்டது. ஜாகோப் வீட்டை விட்டு வெளியேறி வந்தால் போராபத்து வந்துவிடும் என்பதை யுணர்ந்த பையனுக்கு நடுக்கமும்பயமும் தோன்றிவிட்டது. உடனே "ஜாக்கோப் இங்கேஇல்லை" என்று குழம்பிக்கொண்டே கூறினன்.

ஆனல், அப்பையனின் முகமே அவன் பொய் சொல்கிறான் என்பதை அறிவித்துக் கொண்டிருந்தது. அன்வர் பாஷா அப்பையனை வெகுவாக ஏமாற்றியும் அதட்டியும் கேட்டுப் பார்த்தார். ஆயினும் பையன் "ஜாக்கோப் இங்கில்லை" என்றே கூறிக்கொண்டிருந்தான். ஆனல் அந்த வீட்டில் தான் ஜாக்கோப் ஒளித்துக் கொண்டிருக்கிறான் என்பதை அன்வர் பாஷா நன்கு உணர்ந்துகொண்டாராதலின், உடனே, தமது சிப்பாய்களுக்குச் சப்தங் கொடுத்து அழைத்து வீட்டை முற்றுகையிட்டுக் கொண்டார். பின்னர் வீட்டிற்குளுள்ள ஒவ்வொரு இடத்திலும் சோதனை செய்ய ஆரம்பிக்கப்பட்டது. வீடுமுழுவதும் சோதனை போட்டாகி விட்டது; ஜாக்கோபைக் காணவில்லை. அவன் இருக்கிறான் என்பதற்குள்ள அறிகுறியைக் கூடக் காணோம். அன்வர் பாஷா அந்தப்பையனையும் தம்முடன் வைத்துக்கொண்டே சோதனையிட்டார். கடைசியாக அவ்வீட்டினுள் ஒரு அறைதான் பாக்கியாக இருந்தது. அதில் உமிமூட்டை நிறைந்திருந்தது. இந்த அறைக்கு வந்தவுடன் பையனின் மூஞ்சி மஞ்சள் நிறமாக மாறிவிட்டது. இந்த அறைக்குள்தான் ஜாக்கோப் இருக்கிறான் என்பதைப் பையனின் முகக்குறியால் அன்வர் பாஷா நன்கு உணர்ந்து கொண்டார். அன்வர் தன் சிப்பாய்களை நோக்கி "இந்த அறையைக் கொளுத்தி விடுங்கள்" என்று சப்தமிட்டுக் கூறினார். ஆனல், அன்வர் பாஷா பயங்காட்டுவதற்காகத் தான் இம்மாதிரி கூறினார். உண்மையிலேயே அந்த வீட்டைக் கொளுத்திவிடவேண்டு மென்பது அவரது நோக்கமல்ல. இவ்விஷயம் பையனுக்குத் தெரியாததாகையால் "வேண்டாம்! வேண்டாம்! இந்த அறையைக் கொளுத்தி விடாதீர்கள்" என்று கூறினன் பையன். பையனின் இந்தப்பதில் ஜாக்கோப் அங்கிருக்கிறான் என்ற இரகசியத்தை அம்பலபடுத்திவிடவே, உடனே உமிமூட்டைகள் வெளியிலெடுக்கப் பட்டது. மூட்டைகளுக்குக் கீழில் உள்வீடு இருப்பது வெளியாயிற்று. உடனேஉள்வீட்டுக்குள் துருக்கிச்சிப்பாய்கள் இறங்கினர். அங்கு ஜாக்கோபும், அவனுடன் கலகத்தலைவர்களில்பத்து பேரும் இருந்தனர். துருக்கி சிப்பாய்களை அக்கலகத்தலைவர்கள் தாக்கினர். துருக்கியரும் சண்டைபோட்டனர். இச்சண்டையில் ஜாக்கோப் செத்தான். அவனுடைய துணைவர்களை அன்வர் அரஸ்ட் செய்தார்.

## அன்வர் பாஷாவின் மார்க்க பக்தி

சலோனிகாவிலுள்ள ரஷிய ஸ்தானிகர் நடன சபை ஒன்றைக் கூட்டினர். அதற்கு ஸ்தலத்திலுள்ள துருக்கி ஆபீஸர்களை எல்லாம் அழைத்திருந்தார். இதுபோல் அன்வர் பாஷாவுக்கும் அழைப்புக் கிடைத்தது. எல்லா உத்தியோகஸ்தர்களும் நடனசபைக்குச் சென்றனர். நடனமாதியவர்களில் பிரஞ்சுக் கட்டழகியும் ஒருத்தி. அச்சபைக்கு வந்திருந்தவர்களின் திருஷ்டி முழுவதும் அக்கட்டழகியின் மீதே இருந்தது. அவளின் ரூபலாவண்யத்தைப் பார்த்து யாவரும் பரவசமடைந்திருந்தனர். இவள் தம்மை ஒருமுறையேனும் கடைக்கண்ணல் பார்த்து விடமாட்டாளா என்று ஒவ்வொருவரும் ஏங்கி இருந்தனர். ஆனல், அப் பரங்கி நாட்டியப் பெண் இவர்களைக் கொஞ்சமும் லக்ஷியஞ் செய்யவில்லை. கடைசியாக பரி உருவமெடுத்த இப்பிரஞ்சு மாது அன்வர் பாஷாவினண்டையில் சென்றனள். அவரைப் பார்த்து மெய்மறந்தனள். பின்னர், அவள் சலோனிகாவிலுள்ள துருக்கி கவர்னரிடம் 'அன்வர் பாஷாவைச் சந்திக்கவேண்டுமென்று தாம் விரும்புவதாகத் தெரிவித்துக்கொண்டனள். கவர்னர் அன்வர்



பாஷாவை அழைத்து அவளுடன் அறிமுகப் படுத்திவைத்தார். அவள் தமது வீட்டுக்கு வரவேண்டுமென்று அன்வர் பாஷாவை அழைத்தாள். இருவருக்குமிடையில் நேசமும் உண்டாகிவிட்டது. இக்கட்டழகி அவளுடைய வலையில் தம்மைச் சிக்கவைக்க விரும்புகின்றனள் என்பதைஅன்வர் உணர்ந்துகொண்டார். பின்னர், அவள் தன்னை மணந்துகொள்ளும்படி அன்வர் பாஷாவைக் கேட்டுக்கொண்டாள். உடனே அன்வர்பாஷா மறுத்துக்கூறியதுடன் அன்றிலிருந்து அவளுடைய சிநேகத்தையும் விட்டுவிட்டார். இஸ்லாமிய உலகம் முழுவதும் சுயேச்சை யடையவேண்டுமென்று பிரீதிகொண்டிருந்த அவருடைய இருதயம் ஒரு பரங்கி ஸ்திரீயின் அழகைக்கண்டு மயங்குவது எங்ஙனம் நடைபெறும்?

## துருக்கிப் புரட்சி

அன்வர் பாஷா துருக்கி ஐக்கிய முன்னேற்றச் சங்கத்தில் சேர்ந்து அதில் விசேஷச் சிரத்தை காண்பித்துவந்தார். இச்சங்கத்தாரின் நடவடிக்கைகளையும் நோக்கத்தையும் பற்றி சுல்தான்அப்துல் ஹமீது கான் அவர்களுக்கும் தகவல் எட்டிற்று. உதுமான் பாஷா, ஷம்ஸுத்தீன் பாஷா, இப்ராஹீம் பாஷா, ஹில்மீ பாஷா, நாஜிம்பே ஆகியவர்களின் மீது சுல்தானுக்கு அதிகம் நம்பிக்கை இருந்தது. நாஜிம்பே அன்வர் பாஷாவின் சகோதரியை மணந்தவராதலால் அன்வர் பாஷா நாஜிம்பேயின்பால் தமக்குள்ள அபிமானத்தின் காரணமாக இந்தச் சங்கத்தின் புரட்சிக்கொள்கையைப்பற்றிக் கூறி அவரைத் தம் வயப்படுத்த முயன்றார். ஆனல், நாஜிம்பே அன்வர் பாஷாவை ஏமாற்றக் கருதித் தமக்குப் புரட்சி இயக்கத்தில் அனுதாபமிருப்பதாகக்கூறிப் புரட்சிச் சங்கமான ஐக்கிய முன்னேற்றச் சங்கத்தில் அங்கத்தினராகவும் சேர்ந்துகொண்டார். நாஜிம்பே, சதிக்குள் சதி செய்யும் இம்முறையால்புரட்சிகோஷ்டியினரின் சில இரகசியங்களை யறிந்துகொண்டதுடன் அதிலுள்ள முக்கிய அங்கத்தினர்கள் யார் யார் என்பதையுங் கூடத்தெரிந்து சுல்தான் அப்துல் ஹமீது கானுக்கு விபரமாகக் கூறவாரம்பித்தார். சுல்தான் அவர்கள் அக்கோஷ்டியில் சேர்ந்தவர்களைச் சிறுகச் சிறுகப்பிடித்துக் கடலில் மூழ்கடித்துக்கொண்டு வந்தார். ஆனல், அன்வர் பாஷா பிடிபட இருக்கிற சமயத்தில் விஷயம் வெளியாகிவிட்டது. அன்வர் பாஷாவின் சகோதரி தமது கணவன் செய்யும் சதிக்குள் சதியான காரியத்தை அன்வர்பாஷாவிடம் கூறி உடனே சலோனிக்காவை விட்டு வெளியேறிப்போய் விடவேண்டுமென்றும், இல்லையேல் அரசாங்கத்தார் கைதிசெய்துவிடுவார்கள் என்றும் புத்திமதி கூறி, அன்வர் பாஷாவின் உயிரைக் காப்பதற்கான முயற்சி செய்தனள்.

உடனே அன்வர் பாஷா தமது துணைவர்களுக்கு இருக்கிற நிலைமையை விவரித்துக் கூறி, இந்த க்ஷணத்திலேயே புரட்சிக் கலகத்தை ஆரம்பித்துவிடவேண்டும்; இல்லையேல் நாம் அனைவரும் கைதி செய்யப்படுவோம் என்றும், நம்முடைய எல்லா ஏற்பாடும் வீணுகிவிடுமென்றும் கூறினர். எனவே, இன்றைய தினமே புரட்சிக் கலகத்தை ஆரம்பித்துவிட வேண்டும்; சுல்தான் அவர்களுக்குப் பூரண ஆதரவை அளிப்பவரான ஷம்ஸுத்தீன் பாஷாவைக் கொன்று விடவேண்டும்; சிறந்த சேனதிபதியும் உபயோகமுள்ளவருமான உதுமான் பாஷாவைக் கொல்லாமல் கைதி செய்துவிட வேண்டும்; ஹில்மீபாஷாவை அன்வர் பாஷா கண்டு பேசிக் கலந்தபின் அவரைக் கொலை செய்வதா அல்லது கைதி செய்வதா என்ற விஷயத்தை முடிவு செய்துகொள்ளலாம்" என்று தீர்மானஞ் செய்யப்பட்டது.

இம்முடிவு செய்தவுடன்அன்வர் பாஷாஹில்மீ பாஷாவின் இல்லஞ் சென்று பெரும் அபாயம் நிகழும் போலிருக்கிறது; ஐக்கிய முன்னேற்றச் சங்கம் சுல்தான் அவர்களுக்கு எதிராக இல்லை; சுல்தான் அவர்களின் மூடமந்திரிமார்களை நீக்கிவிடவேண்டு மென்றுதான் விரும்புகிறது; சுல்தான் அவர்களை அரசுரிமையிலிருந்து அகற்ற வேண்டுமென்பது அச்சங்கத்தின் நோக்கமன்று; ஐக்கிய ஒன்றுமைச் சங்கம் புரட்சிக் கலகத்தில் வெற்றி பெற்றால் தங்களை முதல் மந்திரியாக ஆக்கிவிடும்; இதற்காகத் தாங்கள் அந்தச் சங்கத்துக்கு உதவிபுரிய வேண்டும்" என்று கேட்டுக்கொண்டார்.

ஹில்மீ பாஷா புரட்சிச் சமாச்சாரத்தைக் கேட்டவுடன் நடுக்கங்கொண்டுவிட்டார். நடுங்கிக்கொண்டே நான் செய்யக் கூடியது ஒன்றுமில்லை; நீங்கள் வெற்றி பெறவேண்டுமென்று துஆச் செய்கிறேன்; உங்கள் கலகத்தை நான் நேருக்கு நேராக எதிர்க்கமாட்டேன்; உங்களுடைய சங்கம் அதிகப் பலம் பொருந்திய சங்கமாக இருப்பதால் அதை எதிர்ப்பதில் பிரயோ

ஜன மில்லை யென்றும், சுல்தான் அவர்கள் பால் சங்கத்துக்கு துவேஷமில்லை என்றும் தக்க சமயத்தில் சுல்தான் அவர்களுக்கு அறிவிக்க முடியும் என்றும் வாக்களித்தார்.

### அன்வர் பாஷாவின் வீரதீரம்

இவ்வர்க்குறுதியை வாங்கிக் கொண்டு கடைசிமுறையாகச் சகோதிரியைப் பார்க்க நாஜிம்பே வீட்டுக்கு அன்வர் பாஷா வந்தார். அங்கு நாஜிம்பேயும் இருந்தார். அன்வர் பாஷாவைக் கண்டவுடன் அவரது சகோதரி சமிக்ஞையாகப் போலீஸ் படை ஒளிந்திருப்பதை அறிவித்து விட்டார். உடனே அன்வர் பாஷா நாஜிம்பேயைப் பிஸ்தோலால் சுட்டுக் காயப்படுத்தி வீழ்த்தினர். உடனே போலீஸ் பட்டாளம் பகிரங்கமாக விட்டை முற்றுகை போட்டது. போலீசாரில் ஒருவரைச் சுட்டுக்கொன்றார். மற்றொருவரைக் காயப்படுத்தி வீழ்த்தினர். மூன்றாவது போலீஸ்காரனை இரண்டு உதை விடுத்து வீட்டை விட்டுத் தாராளமாகத் தப்பி வெளியேறினர். ஒரு நிமிஷத்தைக் கூட வீணாக்காமல் உடனே கலகத்தை ஆரம்பித்து விடவேண்டுமென்று சங்கத்தின் எல்லா கிளை ஸ்தாபனங்களுக்கும் தகவல் அறிவித்து விட்டார். மூட மந்திரிமார்களை உடனே நீக்கி விட்டு 24 மணிநேரத்துக்குள் பார்லிமெண்டரி ஆட்சி முறையை ஏற்படுத்தவேண்டு மென்று ஏராளமான கையொப்பமிட்டுச் சுல்தானுக்குத் தந்தி கொடுக்க ஏற்பாடு செய்தார். பின்னர், உடனே சலோக்காவிலிருந்து அன்வர் பாஷா மலாஸ் என்ற ஊருக்குச் சென்று பிரசித்தி பெற்ற தளகர்த்தரும் உபயோகமானவருமான உதுமான் பாஷாவைக் கைதிசெய்தார். ஷம்ஸுத்தீன் பாஷாவைக் கொலை செய்து விட்டதாகத் தகவலும் கிடைத்தது.

புரட்சி ஏற்பட்ட இச்சமாச்சாரம் சுல்தானுக்கு எட்டியவுடன் ஸ்மர்ணாவிலுள்ள சைனியங்களை உடனே சலோனிக்காவுக்கு அனுப்பிக் கலகக்காரர்களை அடக்கி விடவேண்டு மென்று உத்தரவு செய்தார். ஆனால், ஸ்மர்ணாவிலுள்ள ஐக்கிய முன்னேற்றக் கிளைச் சங்கத்தார் துருக்கிச் சைனியங்களில் ஒவ்வொருவருக்கும் ஒரு சிகரட் பெட்டி இனமாகக் கொடுத்தார்கள். அந்தப் பெட்டிக்குள் ஒரு விளம்பரமும் வைக்கப்பட்டிருந்தது. "அன்வர் பாஷா சுல்தான் அவர்கள்பால் அதிகப்பற்றும் ராஜபக்தியுமுள்ளவர்; மூடமந்திரிமார்களைத்தான் அவர்களுடைய பதவிகளிலிருந்து நீக்க விரும்புகிறார்" என்று அவ்விளம்பரங்களில் குறிப்பிட்டிருந்தது. ஸ்மர்ணாவின் பட்டாளங்கள் சலோனிக்காவுக்குச் செல்வதற்கு முன்னரே ஐக்கிய முன்னேற்றச் சங்கத்தாரால் உண்மையை உணர்ந்திருந்தார்களாதலால், சலோனிக்காவில் கலகக்காரர்களை எதிர்த்து யுத்தம் செய்ய மறுத்துவிட்டனர். இந்தச் சந்தர்ப்பத்தில் ஹில்மீபாஷா தமது வாக்குறுதியின்படி சுல்தான் அவர்களுக்கு "புரட்சிக் கலகம் ஐரோப்பியப் பிரதேசம் முழுவதும் பரவிவிட்டது; ஐக்கிய முன்னேற்றச் சங்கம் அதிகப் பலம் பொருந்தியதாக இருக்கிறது; உதுமான் பாஷா கலகக்காரர்களால் கைதி செய்யப்பட்டிருக்கிறார்; ஷம்ஸுத்தீன் பாஷா கொல்லப்பட்டுவிட்டார்; நாஜிம்பே காயமடைந்து ஆஸ்பத்திரியில் கிடக்கிறார் ஆதலால் ஐக்கிய முன்னேற்றச் சங்கத்தை இந்நிலைமையில் எதிர்ப்பது பிரயோஜனமில்லாத காரியமாகும்" என்று தந்தியின் மூலம் அறிவித்தார்.

சுல்தான் அப்துல் ஹமீதுகான் இச்செய்தியை அறிந்தவுடன் பயந்து பார்லிமெண்டரி அரசியல் திட்டமுறையை ஏற்படுத்திக் கொடுப்பதாக ஒப்புக்கொண்டு விட்டார். எனவே, இந்தப் புரட்சியில் அன்வர்பே அதிகம் கீர்த்தி பெற்றாராதலின், ஜனங்களது அபிமானத்தைப் பெற்று விட்டார். துருக்கியர் அனைவரும் அவரை "ஹீரோ" (வீரர்) என்று கொண்டாடினர். ஆகவே, ஐக்கிய முன்னேற்றச் சங்கம் அன்வர் பாஷாவுக்கு ராணுவத்தில் உயர்பதவி யளிக்க வேண்டுமென்று சுல்தான் அவர்களை வற்புறுத்திற்று. இதன்பேரில் அவர் மேஜர் பதவிக்கு உயர்த்தப்பட்டார். சுல்தான் அப்துல் ஹமீதுகான் மிகவும் தந்திரசாலியாகையால், இப்புரட்சி நிகழ்ந்த ஒரு வருஷகாலத்துக்குள் எல்லா உலமாக்களையும் தன் வசப்படுத்திக் கொண்டுமார்க்கத்துக்கு ஆபத்து வருவதாகக் கூறிஐக்கிய முன்னேற்றச்சங்கத்துக்கு விரோதமாக அவர்களிடமிருந்து மார்க்கத் தீர்ப்புவாங்கிக்கொண்டார். உடனே தமது சைனியத்திலுள்ள வாலிபத் தளகர்த்தர்களை எல்லாம் கொன்று விடும்படி தமது சிப்பாய்களுக்கு உத்திரவிட்டார். சிப்பாய்களும் முன்பின் யோசிக்காமல் அநேகம் வாலிப தளகர்த்தர்களைக் கொன்றுவிட்டனர்; பார்லிமெண்ட் சபையை முற்றுகை போட்டு நீதி இலாக்கா மந்திரியைக் குண்டுக்கு இரையாக்கி விட்டனர்.



### சுல்தான் சைனியங்களின் தோல்வி

நான் அன்வர் பாஷாவுடன் சேர்ந்து சுல்தான் அவர்களின் அரண்மனையை முற்றுகையிடும் சைனியங்களில் இருந்தேன். அதுபொழுது சுல்தானின் பிரத்தியேகப் பட்டாளத்தின் ஒரு பகுதியினர் பட்டத்து இளவரசர் முஹம்மது ரஷாதுடைய மாளிகையை முற்றுகையிட்டுக் கொண்டிருந்தனர். இவர்கள் இளவரசரைக் கொன்று விடுவார்களோ என்ற சந்தேகம் அன்வர் பாஷாவுக்குத் தோன்றிற்று. உடனே, அவர் என்னை அழைத்து சுல்தான் அவர்களின் பிரத்தியேகப் பட்டாளத்தாரைவிட்டு இளவரசர் முஹம்மது ரஷாதின் மாளிகையைப் பாதுகாக்கும்படி கட்டளையிட்டார். அல்லாஹுதஆலா எனக்கு வெற்றியளித்தான். நான் சுல்தான் அவர்களின் பிரத்தியேகப் பட்டாளத்தைச்சூழ்ந்துகொண்டு அவர்களைத் தாக்கி அவர்களைப் பணியச்செய்து ஆயுதங்களனைத்தையும் பறிமுதல் செய்து, அவர்களை நிராயுதபாணிகளாக்கினேன். அன்வர் என்னுடைய இந்த ஊழியத்தைப் பார்த்து மிகச் சந்தோஷமடைந்தவராய் "நீர் படிப்பு முடிந்தவுடன் என்னிடம் வரவேண்டும்; உம்முடைய இவ்வூழியத்துக்குத் தக்க கைமாறை அப்பொழுது நான் செய்வேன்" என்று கூறினர். (ஜமால்பே என்று ஸ்கூலில் வாசித்துக் கொண்டிருந்த இவர், அன்வர் பாஷாவின் உதவியால் ஜெனரல் பதவிக்கு உயர்த்தப் பட்டதுடன் "பாஷா" என்ற பட்டமும் பெற்றிருந்தார். மகாயுத்த காலத்தில் ஏஷியா மைனரிலுள்ள மேற்கரங்கத்துப் பட்டாளத்துக்குப் பிரமத தளகர்த்தராகவும் ஆக்கப்பட்டார்)

---

## மானிடனில் எதிர்மாறான இருவகை அம்சங்கள்

மௌல்வி E. M. S. கமால் எழுதியது

தெய்வ சிருஷ்டிகளில் பலவேறு குணம் படைத்த பொருட்கள் காணப்படுகின்றன. அவற்றுள் மனுவருக்கமும் ஒன்றாகும். பொதுவாய் அது யாவற்றினும், மிக மிக மேலான பெருமைக்குரிய வர்க்கமென்பது கவனிக்கற்பாலது. வேதமும் இதை விளக்காமலில்லை.

இதர ஜீவராசிகளெல்லாம், ஆண்டவனை உணரும் ஆற்றலற்ற தென்பது ஒரு பக்கமிருக்க, அவற்றில் சிலவை பிறஜீவன்களை, அநுவிஷமாய் அடித்து வதைசெய்வதையே தனக்கு ஆனந்தமாய் காணக் கூடியதாயும், அகங்காரம் அகந்தை கர்வமும் கொண்ட ஐவாய் மிருகங்களாயும், மற்றுஞ்சிலதுபிறருக்கு அபகாரமுமில்லை, உபகாரமுமில்லாது ஒதுங்கி வாழக்கூடிய சாந்தப் பிராணிகளாயும், சுமையெடுத்தல், பண்ணையடித்தல், ஏரு உழுதல், வண்டி இழுத்தல் போன்ற ஒரு சில பிரயோஜனம் தரத்தக்கப் பிறவிகளாயும் இன்னும் பல கோடி குணங்கொண்ட ஜீவக்கும்பல்கள், இந்த பறந்த பூமியில் உயிர்வாழக் காண்கிறோம். இவ் விலங்குகளெல்லாம் தெய்வத் தன்மையை உணர்வனவாயில்லை. மேலும் அவைகட்கு எவ்வித விலக்குமில்லை. வயிறுபுடைக்க பிடித்தடித்து தின்பதும் கவலையின்றி, உறங்குவதும், தாய் தங்கையென்ற வித்தியாசங்கூடப் பாராது புணர்ந்து தன்காமத்தைத் தீர்த்துக் கொள்வதும், இன்னும் தனது மனோபீஷ்டம் எதுவாயிருப்பினும் அதை பூர்த்தி பண்ணிக்கொள்ள தனது முழுபலத்தையும் பிரயோகம் பண்ணிக்காட்டும் முரட்டுப் பிராணிகளாயு மிருக்கின்றன. இதைவிட அதிகமாய் ஒன்றையும் அவைகளிடம் எதிர்பார்ப்பதற்கில்லை.

ஆனால் இவைகட்கு நேர்மாறான வருக்கத்தார் தேவர் (மலக்கு) களாகும். தெய்வ வணக்கத்தில் இவர்கட்கு ஓர் தனிப்பெருமையுண்டு. ஒருக்கணமும் இவர்கள் தன்கடவுளுக்கு மாறு செய்வதேயில்லை. அவரவர்கட் கிடப்பட்ட கட்டளையை நிறைவேற்றி வைப்பதிலேயே கண்ணுங் கருத்துமாய் இருப்பார்கள், சதா ஆண்டவனுக்கு சாட்டாங்கம் பண்ணிக் கொண்டிருப்பதையே சன்மத் தொழிலாய்க் கொண்டவர்கள். அவர்கட்கு அதில்தான் ஆனந்தம். உண்பதும் உறங்குவதும் ஆண் பெண்

ஆசையும் அவர்களின் இயர்க்கையில் அமைக்கப் பட்டவைகளாயில்லையாதலின், அவர்கள், ஆண்டகையையே சதா வணங்கி வருவதற்கான நல்ல சந்தர்ப்பத்தை அடையப்பெற்றவராயினர்.

எனவே, பிரஸ்தாப மனுஷ வருக்கத்தின் கதியை நோக்கின், அது மிக்க பரிதாபகரமான அதோகதியாய்த் தான் காணப்படாநின்றது. ஏனெனின், ஏறுக்குமாறான ஒருவகை இயற்கைகளினூடே அகப்பட்டு இருதலைக்கொள்ளி எறும்பேபோல் அவதிப்படக்கூடியவனாயிருன். தவளையும் எலியும் தோழமைப் போட்டு கயிற்றால் தங்களை பிணைத்துக்கொண்டதேபோல் தான், இவன் கதை காணப்படுகிறது. ஒரு பக்கம் மிருக குணம் தண்ணீர் குட்டைக்கிழுக்கிறது. மற்றொரு பக்கம் தேவகுணம் கறைக்கிழுக்கிறது. இது அவனுக்கென்று ஏற்படுத் தப்பட்ட பரீக்ஷார்த்தமாகும்.

ஆனல் எந்த ஜீவன்கட்கும், தேவர்கட்குங் கூட அளிக்கப்படாத சொர்க்காநந்தத்தை அனுபவிப்பவன் இவனே. அதேபோல் எந்த பிருணிகட்குமில்லாத நரக அவஸ்தையை அடைபவனும், இவனுகவேதான் இருக்கிறுன். ஏனெனில், தேவர்களின் அறிவாற்றலும், தெய்வத்தையறியும் தன்மையும், வந்தனை வழிபாடு செய்யும் திறனும் இவனில் உண்டு. அதேபோல் மிருகங்களின் குணக்கேடான மனோ எழுச்சிக்கு வயப்பட்டவனுயு மிருக்கிறுன். தின்னவும், உண்ணவும், உறங்கவும் பிறரை ஹிம்சிக்கவும், ஆண் பெண் காமத்தில் கட்டுண்டு கிடப்பதுமான இருவகைமாறுன இயற்கையினூடே இவனது வாழ்க்கையை வெகு ஜாக்கிரதையாய் மிதமாய்க் கொண்டு சமாளிக்கவேண்டியவனு யிருக்கிறுன். இந்த தரும சங்கடத்தில் மாட்டிக்கொண்டிருக்கும் மனுவருக்கத்தைப்பற்றி, வேதவாக்கின் ஒரு சில இடங்களில் மிகமிகப் போற்றிப்புகழ்ந்தும் வேறு சில இடங்களில் தூற்றி இகழ்ந்தும், கூறப்பட்டிருப்பதை அனந்தங்காணலாம். திருமறையில் சிலர் போற்றப்படுவானேன்? சிலர் தூற்றப்படுவானேன்? என்பதை எடுத்துக் காட்டுவதே இக்கட்டுரையில் எமது கருத்தாகும்.

சோதரீர்! ஆண் தத்துவமற்ற அலியொருவன் விபசாரத்தை முற்றிலும் விலக்கிவிட்டான். பரமாதரை கண்ணெடுத்தும் பார்ப்பதில்லையென்பதால் அவனுக்கு ஓர் பெருமையை ஏற்படுத்திவிடுவதற்கில்லை. அதேபோல் வாய்ப்பேசவியலாத ஊமையொருவன் எவரிடமும் வம்பளப்பதில்லையென் பதிலிருந்து அவனை சாது (சூபி) என்று சொல்வதற்கில்லை. இன்னும் வயிற்றுக்கஞ்சிக்கு வகையற்றவன், தான் பிட்சை இரக்கும்போது தன், தந்தங்கள் பதினையும் திறந்து காட்டி மிக பணிந்து குனிந்து கும்பிடுபோடுவதால் அவனை மிக சாந்த சற்குண சீலன் என, சிலாகித்துக் கொள்வதில்லை. இது சம்பந்தமாய் புல்புலெஷீராஸ், ஸஃதீ பெரியாரின் ஓர் கவியை கவனியுங்கள். ஸகர்தன் பராஸான் தவாஜுஃநீ கோஸ்த்,கதாகர்தவாஜுஃக்குனத்கூயே ஊஸ்த், புஜபல பராக்கிரம சாலிகளிடமிருந்து (காணப்படும்) பணிவு (தான்) போற்றுதற்குரியதாகும். (அஃதின்றி) பிச்சைக்காரன் பணிவானுயின், அதுதான் அவனது இயற்கையாயிற்றே, என்கிறுர்.

கையாலாகாத அல்லது கைகால் இல்லாத முடவனெருவன் யாரிடமும் மல்லுக்கு நிற்பதில்லையென்பதால், அவனுக்கு அதனுல் ஓர் மகாத்மியம் ஏற்பட்டுவிடுமா?

எனவே, சர்வசம்பத்தும் திடகாத்திரியமும், வீறுகொண்ட காமமும் உடைய கட்டுமஸ்தான காளை பிராயத்தான் பரஸ்திரீ கமனத்தில் பிரவேசியாது திரஸ்கரித்திருப்பானுயின் அவன்தான் போற்றுதற்குரிய புண்ணியவானுவான். நாக்கு வன்மையும் பேசுந்திறனும் பெற்றிருக்கும் ஒருவன், வீண் விதண்டாவாதங்களில் விழாமலும் வம்பளக்காமலும், வீண் கருமங்களை விட்டும் மௌனவிரதங் கொள்வானுயின் அவன்தான் உண்மையில் சாதுச் சீலனுகும்.

பணச்செருக்கும், திரேகத்திமிரும், பலமும், பலாட்டியமும், மண்டை நிறைந்த மமதையும், கர்வமும் குடிகொண்ட ஒருவன், ஜனங்களிடம் தன்மையாயும் பணிவாயும் நடந்துகொள்வானுயின் அவனைத்தான் உலகம் போற்ற முன்வருகிறது.

தண்டிக்க சக்தியிருந்து கோபத்தை யடக்கிக் கொள்பவரைத்தான் பொருமையாளரென்பார்கள். அஃதின்றி முதலாளியின் மீது வேலைக்காரனுக்கு ஏற்படும் காரத்தை பிரயோகிக்க போக்கின்றி பொருமையா யிருப்பானுயின் அவனைப் பெருமைப்படுத்துபவர் எவருமிலர். சக்தியிருந்து சாந்தமா யிருக்கிறுனு? வென்பதுதான் மீண்டும் நினைவில் கொள்ள வேண்டிய விஷயமாகும்.



எனவே, அமரர்கட்கு மனுஷவருக்கத்தாருக் குள்ளதேபோல் எதிர்மாறுன மிருககுண மொன்றும் அவர்கள் இயற்கையில் அமைக்கப் பட்டில்லை யாதலின், தீக்கருமங்களில் அன்னேர் தலையிடாது தப்பிக் கொள்கின்றனர். அதனுல் அவர்கட்கு ஒரு விசேட உயர்வை தீர்மானித்து விடமுடியாது. மிருக குணத்தையும் ஒன்று கூட்டி அவர்களை பிண்டம் பிடிக்கப் பட்டிருப் பின் அப்பொழுது அவர்களின் வண்டவாளமும் மட்டைக்கு இரண்டு கீத்தென்று விளங்கிப் போயிருக்கும்.

சதா துஷ்கிருத்தியங்களைத் தூண்டிக் கொண்டிருக்கும் மிருக குணத்தோடு சேர்த்து சமைத்த சிருட்டிக்கப்பட்டிருக்கும் மனித வருக்கம், போதா குறைக்கு, சருக்கி விழுந்த சிசுவுக்கு அரிவாள்மணையாம் ஆதாரம் என் பது போல், இராக்ஷச பிரகஸ்பதியான இப்லீஸுவின் திருவிளையாடலுக்கும் ஆளாக்கப்பட்டிருக்கும் இவ்விபரீத தருமசங்கட நிலைமையில் துர்கிருத்தியங்களை தூரத்தள்ளி சத்காரியங்களை சிரமேற்கொள்ளுமாயின், கண்டிப்பாய் அவர்கள் போற்றுதற்குரிய பிரிவினர்தான் யென்பதில் எங்ஙனம் ஐயுறமுடியும்? இன்னரைப்பற்றித் தான் ஆண்டகை தன் வேதவாக்கில் அளாவளாவி புகழ்ந்து கூறுகிறுன்.

மற்றுஞ் சிலர் தூற்றப்படுவானேன்? மனிதரில் மிருக குணம் மட்டு மின்றி கொள்ளத் தக்கது இன்னது, தள்ளத்தக்கது இன்னது என்று பகுத்தறியும் ஆற்றல் அருள்ப்பெற் றுங்கூட அறவே தேவ குணத்தைத் தள்ளி விட்டு முற்றிலும் மிருக குணத்தில் கட்டுண்டு, ஆண்டகைக்கு வந்தனை வழிபாடு செய்யாமல், தொழுகையுமில்லை, நோன்புமில்லை, துகைவரியு (ஜக்காத்து) மில்லை, தெய்வாலய கிரியையு (ஹஜ்ஜு) மில்லை, சுருங்கச் சொன்னுல் இஸ்லாமிய அனுஷ்டானம் ஒன்றுமே யில்லாது, துருக்கர் குலத்தில் பிறந்துவிட்ட தோஷத்தால் முஸ்லிம்களின் வேஷத்தைப் பூண்டு அஃதோடு தன்கடன் கழிந்து விட்டதாய் கனவு கண்டலையும் குண்டர்கள், மனித ஜன்மமெடுத்ததால் இலாபமென்ன? அவனுல் உலகிற்கு ஒருவகை இலாபமுமில்லாது, அவன் உயிர் வாழ்ந்திருப்பதைவிட செத்துக்கெட்டுப் போவதே சிலாக்கியமென, மக்கள் நினைக்குமளவுக்கு, பிறருக்கு ஹிம்சையை உண்டு பண்ணியும், சதா பாபச்செயலில் புரண்டும், குடி கொலைகளவு சூது விபசாரம் போன்ற பஞ்சமா பாதகங்களைபுரிந்தும், நூற்றுக்கு தொண்ணூற்றென்பது வீதம் சரீரம் நிறைந்த பொய்யும் பித்தலாட்டமும், போக்கிலித்தனமும், காலித்தனமும், கள்ளம் கபடு வஞ்சகம், இச்சகம் பொருமை குரோதம் மமதை அகந்தை அகங்காரம் இன்னு மிதுபோன்ற கேவலமான ஜந்துக்களுக்குரித்தான குணங்களத்தனையும் நித்தியபத்தியமாய் கையாண்டுவரும் இந்நரவம்மிசத்தாருக்கு, தன் மனோஎழுச்சியை அடக்கி, மனதை நல்வழி திருப்பி, போனபோக்கில் போய் படுகுழியில் விழாமல், தன்னை பாதுகாத்துக்கொள்ள போதிய அறிவிருந்தும் அதை துருப்பிடிக்க விட்டுவிடில், அவர்கள் மிருகங்கள்தானென்ன? அதனினும் கடையவராய்க் கணிக்கப்படுவதில் என்ன ஆச்சரியமிருக்கக் கூடும்?

இவர்களைப்பற்றித்தான் ஆண்டவன் தன் வேதத்தில், அவர்கட்கு ஹிருதயங்களுண்டும் அவைகளைக் கொண்டு பகுத்தறிய மாட்டார்கள், அவர்களுக்கு செவிகளுண்டும் அவைகளைக்கொண்டு செவியுரமாட்டார்கள். அவர்களுக்கு நேத்திரங்களுண்டும் அவைகளைக்கொண்டு நோக்க மாட்டார்கள், அவர்கள் கால்நடைகளைப்போன்றவர்களேன்ன (அதனினும்) அவர்கள் கேடு கெட்டவர்கள்! (அவர்கள் அடையவேண்டிய அந்தஸ்தை விட்டும்) ஏமாந்தவர்களாகும். என்கிறுன்.

கண்ணிருந்தும் குருடனைப்போலிருப்பதும், காதிருந்தும் செவிடர்களா யிருப்பதும், ஹிருதயமிருந்தும் தாதுவருக்கமே போலிருப்பதும் மிகமிக வெட்கக்கேடேயாகும்.

ஏ, "அஷ்ரபுல் மக்லூகாத்," என்னும் அருமைப் பெயர்வகித்த நேயர்காள்! மலக்குகளினும் மேன்மை யடையும் வழியைப்பற்றி கௌரவமடைய ஓடிவாருங்கள்.

இல்லையேல், இறுதிநாளில் நாம் சிங்கில் பைகூட மதிக்கப்படமாட்டோம் என்பது ஞாபகமிருக்கட்டும்.

எல்லாம் வல்ல இறைவன் யாம் அடையவேண்டிய அந்தஸ்துக்கு சந்தர்ப்பமும் சௌகரியமும் செய்து தருவானக. இந்த எமது வேண்டுகோளை ஏற்றுக்கொள்வானக.

# முல்லாவும் காதியானியும்

(சென்ற பிப்ரவரியீ தொடர்)

முல்லாஜீ :— அந்தோ ! என்னுண்டவா !! பின்னர் கூறும் என் கண்ணே !!! என் முழியே.

காதியானீ:-நாங்கள் ஏசுநாதரிடமிருந்துவிறட்டப்பட்டபின் மா - துயரடைந்து நொந்த மனத்தோடு அச்சுடுநீராற்றுக் கரையோரமாக தள்ளாடித் தள்ளாடி நடந்துவந்து கொண்டிருக்கும்போது, ஜெயிலைவிட்டும் தப்பியோடிய கைதிகளை போலீஸ்காரர்கள் தேடிவருவதுபோல், இருமலக்குகள் அங்குமிங்கும் பார்த்தவர்களாய்வந்து கொண்டிருந்தனர்.

அவர்கள் எங்களைக் கண்டபோது, தங்கள் "மலக்குப் பாஷை"யில் ஏதோ பேசிக்கொண்டு, எங்களை நோக்கி வேகமாய் வந்தார்கள். அவ்வாறு நடந்து எங்களுக்கு மிக்க சமீபமாக வந்திட்டபோது, அவர்களை நோக்குங்கால் அம்மலக்குகளின் இருவிழிகளும் சிவந்து தகதகவென அக்கினிப் பொறிகள் பறந்து கொண்டிருந்தன. அவர்கள் கரங்களிலிருந்த "மஃஷர் தடியால்" எங்கள் தலைமீது பெரிய அடியொன்று போட்டு, ஏ ! காவன்னுப் பயல்களா!! நீங்கள் எங்கு ஓடி ஒழிந்து கொண்டீர்கள் !!! காதியானியர் கூட்டத்தில் இரு காதியானிகள் குறைவுபடுகிறதாகவும், அவர்களை எப்படியாவது தேடி, கொண்டு வந்து சேர்க்கும் வேலை எங்களிடம் சாட்டப்பட்டிருப்பதால், நாங்கள் இம்மஃஷர் முழுதும் ஒரேதேடாகத் தேடிவருகிறோமே, நீங்களிருவரும் எங்கு ஒழிந்து கொண்டீர்கள். மீரட் மௌலானு தென்னுடு வந்தபோது காதியானிகள் ஓடி ஒளிந்தது போல், இங்குமா நீங்கள் ஓடி ஒளிந்து கொண்டீர்கள் என, எங்களுக்குத் தெரிந்த பாஷையில் அவர்கள் ஏசிப் பேசி, மிக்க சினத்துடன் எங்கள் இருகரங்களையும் பிடித்துக்கொண்டு, போலீஸ்காரர்கள் இழுத்துச் செல்லுமாப் போல், அவர்கள் எங்களை இழுத்துச் சென்றனர்.

(இவ்வாறு வெகு பரிதாபத்தோடு காதியானியர் தமது கனவைக் கூறி வரும்போது, இடையில் ராவுத்தர் குறிக்கிட்டு)

ராவுத்தர்:—மாட்சிமை மிக்க முல்லாஜீ அவர்களே ! "ஹிஸ்ஹோலினஸ்" என்னும் பட்டாதார மகானே !! கனவுகண்ட காதியானீ இதோ இருந்து தமது பரிதாபக் கனவைக் கூறி வரும்போது, தம்மையும் தாடிசம்கார முல்லா வியாச தாரையும் மலக்குகள் வந்து பிடித்துக்கொண்டபோது, மீரட் மௌலானு விஜயந் தந்த சமயம் தென்னுட்டின் காதியானிகளெல்லாம் ஒளிந்துகொண்ட சம்பவத்தையும், மலக்குகள் கூறியதாகச் சொன்னுரே என்னு ஹஜ்ரேத்! அஃது உண்மையாகயிருக்குமா? அவ்விஷயம் மலக்குகளுக்கு எப்படித் தெரிந்தது, என்பதை அநேக விஷயங்களுக்கு "ஷரஹ்" செய்துவந்ததுபோல், இது விஷயத்திற்கும் "ஷரஹ்" செய்யுமாறு முல்லாஜியவர்களிடம் கோருகின்றேன்.

முல்லாஜீ :—ஸுப்ஹானல்லாஹ் ! தெய்வாதீனமாக இடையில் ஓர் நல்ல விஷயமும் வந்துவிட்டது. ஆகவே, கனவு சம்பாஷணையை சற்று நிறுத்திவிட்டு, ஷை விஷயமாய்கொஞ்சம் சம்பாஷிப்போம். எல்லா ஜனங்களும் கவனமாகச் செவியுறல் வேண்டும்.

"சில மாதங்களுக்கு முன் வடதேசத்தின் "மீரட்"மா நகரத்திலிருந்து தென்னுட்டிற்கு விஜயந்திருந்த மௌலானு "ஸித்தீக்கீ" அவர்கள் சென்னையில் 15 தினங்களும், நமது நாட்டுச் சுற்றுப்பிரயாணத்தில் 10 தினங்களும் ஆக 25 தினங்கள் வரை தங்கி, இருந்து 15 அரியபெரிய பிரசங்கங்கள் செய்தும், காதியானியத்தையும் அதன் மூலகுருவின் விஷயங்களையும், அம்மதக்கொள்கைகளின் தீங்கையும், ஜனங்களுக்கு நன்கு எடுத்துக்கூறி, பறைசாற்றியும் வந்தபோது "கொக்குக்கூட்டத்தில் ராஜாளி விழுந்தது" போல, காதியானிகளெல்லாம் திகிலடைந்திருந்தனர்.

அச்சமயத்தில் நமது நாட்டிலுள்ள காவன்னுக்களெல்லாம், பர்தாக்களைப் போட்டு மூடிக்கொண்டு, வீட்டின் சமையலறையைவிட்டும் வெளிக்கிழம்பாது கதவுகளை வொஞ்



சரித்துக்கொண்டு தங்கள் குடில்களுக்குள்ளேயே பதுங்கி இருந்துவந்தனர். காவன்னுக்களெல்லாம் கெலி அடிக்கப்பட்டவர்களாய் ஷை 25 தினங்களில் அவர்கள், நிலைப்படியைத் தாண்டி எவரும் வெளியில் வந்தார்களில்லை ராவுத்தரே !

பின்னர் மீரட் மௌலானு அவர்கள் சில தினங்கள்வரை கொழும்பிலும் அரிய பிரசங்கங்கள் செய்துவிட்டு, ஆப்ரிக்கா தேசம் செல்ல, நாடி கப்பலேறிய பின்னரே, தென்னுட்டிலும் கொழும்பிலுமுள்ள காதியானிகளின் தலைகளெல்லாம் மெள்ள மெள்ள தெருக்களில் நடமாடகாணப்பட்டன. மீரட் மௌலானு அவர்கள் பெம்பாயிலிருந்து ரயிலேறியது முதல் ஆப்ரிக்கா தேசத்திற்கு கப்பலேறும் வரை மௌலானு சம்பந்தமாக மூச்சும் விடாது, மூச்சுவிட்டால் அபாயங்கள் சம்பவிக்குமென பதுங்கிக்கொண்டிருந்த ஒரு காவன்னு ப........வானது

மீரட் மௌலானு யாத்திரை செய்யும் கப்பலானது நடுக்கடலில் ஓடிக்கொண்டிருக்கும்போது மெள்ள, தமது தலையைத் தூக்கி, 'ஹிஸ்புல்லாக் கோஷ்டியினர்" ஓர் அன்னியச் சரக்கைப் போட்டுத் தானே.ஆட்டினுர்கள் என, ஓர் பெரிய ஏச்சொன்று ஏசிக்கொண்டு வெளியில் வந்தது.

ஆனுல் ஷை காவன்னுப் பத்திரிகையின் மூல குருவும், தமது குருவின் கொள்கையும், அன்னியச் சரக்கேதான் என்றும், அத்திய அன்னிய சரக்கைக் கொண்டுவந்து தென்னுட்டில், தான் பிரசாரஞ்செய்து ஷை விதேசிச் சரக்கை விற்றுக்கொண்டு திரிவதோடு தானும், தமது மதமும், தமது பிரசாரமும், தமது குருநாதரும், தான் காப்பியடிப்பதும் எல்லாம் அன்னியச் சரக்குகளாகவே இருப்பதோடு, தமது உஜூதும் அன்னிய சரக்கின் காரணமே நிலைப்பட்டிருக்கிறதென்பதையும், தான் கண்விழித்து நோக்காது, "மீரட் மௌலானு"வை மட்டிலும் அன்னியச் சரக்கென்றும் அவர் இந்நாட்டைச் சுற்றித் திரிந்தாரென்றும், ஷை காதியானீ ப.........க்கு எழுத மனம்வந்தது ரொம்ப விசித்திரமாகவும், விநோதமாகவும், பார்க்கப்பட்டது. ஆனுல் மீரட் மௌலானு அவர்கள் வந்த சமயம், காவன்னுக்கள் ஒளித்திருந்த விஷயத்தை மஃஷர் மலக்குகள் எவ்வாறு தெரிந்து கொண்டார்களென்பதற்கு லேசான பதிலுண்டு. அதாவது, இந்த லோகத்தின் மலக்குகள் ஆகாயத்தந்திக் கம்பிகள் மூலமாய் மஃஷரின் 'வைர்லெஸ்' ஆபீஸிற்கு இங்கு நடக்கும் ஒவ்வொரு செய்திகளையும் அறிவித்துவிடுகின்றனர். அதனுல் அங்குள்ள மலக்குகளெல்லாம் உலகின் செய்திகள் யாவற்றையும் நன்கு தெரிந்து கொள்கின்றுர்கள். ஆகவே, மலக்குகளால் இணைக்கப்பட்டிருக்கும் ஷை ஆகாயத்தந்தி மூலமே இச்சமாசாரத்தையும் மஃஷர் மலக்குகள் தெரிந்திருப்பார்கள்."

ராவுத்தர் :—(புதுமையும் கோபமுங் கொண்டு) உலகப் பிரசித்திபெற்ற பல கலா வல்லுனரும் இஸ்லாமிய சத்தியப் பிரசார சாக்தரும் அபார ஞானம் படைத்த ஆசானும், சிங்கப் பிரசங்கியும், துணையீற்ற தனிப்பெரும் மிஷனரியுமான மீரட் மௌலானு அவர்களையா நமது நாட்டுக் கானு காவன்னு பத்திரிகை அன்னியச் சரக்கெனக் கூறியது? ஆச்சரியம் ! அந்த அன்னியச் சரக்கு வந்து காதியானியத்தை மறுத்து, நமது நாட்டில் இரவு பகலாக சாங்கோபாங்கப் பிரசங்கங்கள் செய்தபோது, இந்த சுத்த சுதேசிச் சரக்கு ஏன் வந்து தாக்கிக்கக்கூடாது ஹஜ்ரேத் !

முல்லாஜீ :—அப்படி ஷை காதியானிச் சரக்கு வந்து தாக்கிக்க முன்வந்தால், காதியானிச் சரக்கின் ஸ்டாக் இவ்வளவுதான் என, தென்னுட்டு முஸ்லிம்களுக்கு நன்குதெரிந்துவிடுமென்ற பீதியினுலேயே அஃது தாக்கிக்க முன் வரவில்லை.

ராவுத்தர் :—முல்லாஜியே ! தாங்கள் உண்மை சொன்னீர்கள். இவ்வாறு இவர்கள் சம்பாஷித்துக்கொண்டிருக்கும் இடத்தில் இவர்களின் சம்பாஷணைகளைக் கேட்பதற்காக ஏராளமான ஜனங்கள் வந்து குழுமிக்கொண்டனர். அவ்வாறு குழுமியோர்களில் "ஹிஸ்புல்லாஹ்" ஒருவருமிருந்தார். அவர் இடையில் குறுக்கிட்டு, தாம் சற்று பேச முல்லாஜியிடம் உத்தரவு வாங்கிக்கொண்டு,

ஹிஸ்புல்லாஹ் :—ராவுத்தரே ! ஷை மீரட் மௌலானு வந்திருந்தபோது, எங்கள் சபையிலிருந்து நமது காவன்னு சாயபை சாலன்சுக்கும் அழைக்கப்பட்டிருந்தது; அவர்கள் இல்லத்தைவிட்டும் வெளியில் கிளம்புவதே கூடாதென, தீர்மானித்திருந்தபோது தற்கிக்க எங்ஙனம் வருவார்கள். எனவே அவர்கள் மூச்சும் விட்டார்களில்லை,

முல்லாஜீ :—(பெரிய சப்தமாய்) நமது நாட்டு காவன்னாக்களை நீங்கள் சாதாரணமாக மதிக்கவேண்டாம். அவர்கள் மீரட் மௌலானாவையும், அவர்களின் விஷயத்தையும், தென்னாட்டு காதியானி குருவின், குருநாதரை ஷை மௌலானா அவர்கள் கொழும்பு, சிங்கை, ரெங்கூன் முதலிய ஊர்களில் துறத்தி துறத்திச் சென்றதையும், நமது மௌலானாவின் கல்வித்திறமையும், வாக்கு வன்மையையும் நன்கு தெரிந்திருக்கின்றார்கள். அதனாலேயே மௌலானா அவர்கள் இங்கு வந்து ஆப்பிரிக்காவிற்கு கப்பலேறும் வரை ஷை யார்கள் வெளியில் வராது பதுங்கிக்கொண்டே இருந்தனர்.

"பேச்சு பேச்சென்று பெரும்பூனை வந்தக்கால் கீச்சு கீச்சென்னுமாங் கிளி."

காதியானீ :—இந்த விஷயத்தை இதோடு முடித்து விட்டு தயை கூர்ந்து எமது மீதிக் கனவையுங் கேட்பீர்களாக

முல்லாஜீ :—நல்லது. கனவைக் கூறும்.

காதியானீ :—எங்கள் இருபேர்களையும் மலக்குகள் பிடித்து இழுத்துக் கொண்டு ஓர் கூட்டத்தாருடன் சேர்த்தனர். அக்கூட்டத்தினர் மிக ஆபாச உருவமுடையவர்களாகவும், வெகு அலங்கோலத்தோடு அலறி அழுதவர்களாயும் காணப்பட்டனர். அக்கூட்டத்தினரில் வளர்ந்த உயரமான ஓர் மனிதர், விசன முகத்தையுடையவராயும், பெரிய திடுக்கம் பிடித்தவராயும் உழண்ட உள்ளத்தவராயும் நிம்மதியற்று, அக்கூட்டத்தினடுவில் நின்று கொண்டிருந்தார். ஷை வளர்ந்த மனிதரை யாரென முகத்தை உற்றுப் பார்த்தபோது அவரே எங்கள் மதத்தின் ஸ்தாபகரும் பிரதம குல குருவாயும் இருக்கக் கண்டோம். உடனே நாங்களிருவரும், அவரின் பாதங்களில் விழுந்து எங்களை மன்றாடி ரட்சிக்கவேண்டுமென, கோரிக் கொண்டிருக்குஞ் சமயம், மலக்குகளின் பெரிய கூட்டமொன்று வந்து, கைதிகளை சிறை கூடம் விரட்டிச் செல்வது போன்று, எங்கள் கூட்டத்தோரை பவர்க்கத்தின் புரம், விரட்ட ஆரம்பித்தார்கள், அச்சமயம் நானும் என் ஆப்த ஆர்வலருமட்டிலும் ஒரே ஓட்டமாக ஓடிப் போய் மஃஷரின் சுடு வியர்வை நீர், நதியில் பாய்ந்து நீந்த ஆரம்பித்தோம்.

முல்லாஜீ :—வே! காதியானீ!! மஃஷர் மலக்குகளிடத்திலுமா—வே, உங்கள் காதியானீ ஏமாற்றத்தை கையாடி இருக்கின்றீர்கள். சபாஷ்! பலே பேஷ்!!

காதியானீ :—ஹஜ்ரேத்! பவர்க்கத்து அதாபிற்கு, மஹ்ஷர் சுடு வியர்வையின் சூடானது சுவர்க்கத்து சுகம்போல் இருக்குமென, நினைத்துக் கொண்டுதான் நாங்கள் அவ்வாற்றில் குதித்தோம்

முல்லாஜீ :—அப்பால்.

காதியானீ :—எங்கள் பிரதம குருவையும், எங்கள் வர்க்கத்தினரையும் ஏகமாக மலக்குகள் திரட்டிக் கொண்டு பாதாள லோகத்திற்குச் சென்று விட்டனர். நானும் தாடி சம்கார வியாசதார சகாவுமாக ஷை சுடு நீராற்றில் பல நாட்கள் வரை நீந்திக்கொண்டு மற்றொரு கரையை அடைந்தோம்.

ஹஜ்ரேத்! இத்தனை பயங்கர நிகழ்ச்சிகளிலும், நாங்கள் ஒட்ட வைத்திருந்த இமிடேஷன் தாடிகளானது எங்கள் முகத்தை விட்டும் அகலாமலிருந்தது குறிப்பிடத்தக்கதாகும். ஷை கரையை யாங்கள் அடைந்து மேட்டிற்குச் சென்று பார்த்தக்கால் அங்கு, எல்லோரும், பிரகாச வதனத்தராய், நேர்த்தியான தாடியோடும் நீண்ட ஜுப்பாவை அணிந்தவர்களாய், நேர்த்தியான ககனநாட்டுப் பரிகளின்மீது ஏறிக்கொண்டு, கோட்டையைப் பிடித்த சைனியங்களிருக்கும் உற்சாகம் போன்று, அதி உற்சாகிகளாய் தங்கள் தலைவரின் உத்தரவை எதிர்பார்த்து நிற்போர்கள் போலும் காணப்பட்டனர்.

அப் பெருந்திரளான கூட்டத்தினரைச் சூழ்ந்து எண்ணற்ற மலக்கின் கோஷ்டியினர், காவல்புரிந்து நின்றுகொண்டிருந்தனர். நாங்கள் மஃஷரிலேயே சிலகாலம் கஷ்டப்படவும், மலக்குகளிடம் அடிபடவுமாக இருந்ததால், மலக்குகளின் பாஷையைப் பேச நாங்கள் கற்றுக்கொண்டு விட்டோம். அதன் உதவியால் ஷை நற்பாக்கியக் கூட்டத்தினரை காவல் புரிந்து நின்ற மலக்குகளிடம் இக்கூட்டத்தினரான பாக்கியவான்கள் யார்? இவர்கள் எங்கே போகத் தயாராக நிற்கின்றார்கள் என, மெள்ளக் கேட்டபோது, அம்மலக்குகளில் ஒருவர், எமது இருசெவிகளையும் பிடித்துக் கொண்டு, இப்பாக்கியக்கூட்டத்தினர் முஹம்மது நபியின் (ஸல்.) உயர்தர உம்மத்துகளாவார். இவர்கள் உங்களைப் போன்று, விதண்டாவாதக் குண்டோதார்களாயில்லாது, குர்ஆன், ஹதீது, கியாஸ், இஜ்மாஃ படி நடந்துவந்த இஸ்லாமிய ஹிஸ்புல்லாக்களென்றும், இவர்களின் வெகு தூரத்தின் முன்னணியில் நின்று கொண்டிருக்கும் நபிகள் திலகம் முஹம்மது (ஸல்.) ஸர்தார் அவர்களைப் பின்தொடர்ந்து, இப்பவோ, பின்னையோ என, காற்றைப்போல் பறக்கும் தெய்வலோக இப்பரிகளின் மீது ஆரோகணித்து சுவர்க்க லோகம் புகுதப் போகின்றார்கள் எனக்கூறி விட்டு, அவர் பிடித்திருக்கும் எமது இரு செவிகளையும் நன்கு திருக்கொண்டு, நீர் காதியானியாகாமலிருந்தால் இக்கூட்டத்தினரோடு சேர்ந்து நீரும் ஒன்றாய்ச் சுவர்க்கம் புகுதலாமே? நீர் கெட்டுப்போனீரே என, வெகுசுலபமாக எமது இரு செவிகளையும் திருகி, முறுக்கி, வேறே அவைகளை எடுத்து ஷை சுடு நீராற்றில் போட்டுவிட்டார் ஹஜ்ரேத்!

முல்லாஜீ :—என் வே! காதியானீ, நீர் எங்கள் நபிகள் நாயகத்தையாவது அக்கூட்டத்தில் கண்ணாரக் கண்ட பாக்கியமாவது பெற்றீரா?

காதியானீ :—ஹஜ்ரேத்! நாயகமவர்கள் ஸ்தூலத்தோடு மிஃராஜிற்குச் சென்றதை அபூஜஹ்ல் ஆட்சேபித்து விதிண்டாவாதங்கள் புரிந்ததை விட எத்தனையோ மடங்கு அதிகமாக நானும் எங்கள் குழாத்தினரும் திருநபி (ஸல்.) அவர்களின் மா-வசன திருக்காட்சியை, நபிகளுக்கு ஸ்தூலத்துடன் நிகழ்பெறவில்லையென, மறுத்துக் கூறியிருந்த மூதேவியான இப்பாவிக்கு, அந்நபி நாதரின் திருத்தெரிசினை எங்ஙனம் கிடைக்கப்போகின்றது ஹஜ்ரேத்! மேலும், அம்மஃஷரின் மலக்குகளனைவரும், மனுக் கூட்டத்தினர், ஜின் குழாத்தினர், ஆடு மாடு முதலிய விலங்கினங்களும், பொதுவாய் ஜீவனைக் கொண்டு சலனமுறும் பொருள்களெல்லாம் எங்களை ஒடுக்கப்பட்ட காவன்னாக்களென நன்கு தெரிந்து கொண்டிருந்தனர். அந்தோ! எங்கள் துர்லபத்தை யாரிடங் கூறுவோம், எங்களுக்கு இவ்விதத் தலைவிதியும் ஏற்படலாமா!! என, பிரலாபித்து மூர்ச்சித்தான்.



முல்லாஜீ :—(மூர்ச்சித்திருந்த காதியானீ முகத்தில் ஸலவாத்துச் சொல்லி ஊதிவிட்டு) என்ன வே! உமது கனவு ரொம்ப நீண்ட கனவாக யிருக்கின்றதே!! நீர் ஒரு மாதம்வரை ஓரே தூக்கமாகத் தூங்கியாவே கனவு கண்டீர்?

காதியானீ :—ஹஜ்ரேத்! கனவுதான் நீண்டதே யன்றி, யான் நீண்டு தூங்கவில்லை (எனக் கூறிவிட்டு, கனவை ஆரம்பிக்குமுன்) இடையில் ஓர் விஷயம் ஞாபகத்தில் வருகிறது அதை வினவ அனுமதியளித்தால் கேட்கின்றேன்.

முல்லாஜீ :—நல்லது, கேளும்.

காதியானீ :—ஹஜ்ரேத்! இனி எம்மைத் தாங்கள் தயை கூர்ந்து காதியானீ, காதிரானீ என விளிக்காதீர்கள். இதோ குழுமியிருக்கும் ஜனத்திரளில் இவ்வாறு கூறுவதால் எமக்கு ரொம்ப நாணம் ஜனிக்கின்றது எனவே, இனி தாங்கள் இவ்வடியேனை சீர்திருத்தக்காரனெனக் கூப்பிடவேண்டுமென மிகமிகக் கோரிக்கொள்கிறேன்.

முல்லாஜீ : — வாரும் வே! இப்பத்தான் வழிக்கு வருகின்றீரோ, வாரும்!! ஓர் விருத்தாந்தஞ் சொல்கிறேன், கேளும்!!!

அதாவது, சலனமிட்டுக் கொண்டிருக்கும் இஜ்ஜகத்தின்கண் குறுகிய நோக்கங்கொண்ட காதியானியத் தானது முளைத்து, தலை எடுத்தபோது, இஸ்லாமிய உலகோர் அவர்களை இஸ்லாமிய வட்டத்தை விட்டும் நீக்கி, நேர்வழி தவறிய கூட்டத்தோரென ஒதுக்க ஆரம்பித்த காலத்து, ஷை காதியானி மதத்தின் இரண்டாங்கிளையின் சாமர்த்திய எத்தர்கள் சிலர், தாங்கள் காதியானிகள் அல்லரென்றும், புதிய சீர்திருத்தக்காரர்களென்றும், தாங்கள் ஷை காதியானியத்தின் தோஷத்தை விட்டும் நிரபராதிகளெனவும் இஸ்லாமிய உலகோருக்குக் காட்ட முன்வந்தனர்.

இதற்கு ஷை யார்கள் எத்தகையோரென எமது சொந்த ஹோதர்வில் எவ்வித பதிலும் சொல்ல நான் விரும்பவில்லை. (தொடரும்)

---

## சந்தா நேயர்கட்கு !

மார்க்க சமூக பக்திபூண்டொழுகும் நமது சந்தாதார்களாகிய அபிமானிகள், நடைபெறும் வருடத்திற்குள்ள தங்கள் சாந்தாக்களை தாமதியாது உடனே அனுப்பிவைக்குமாறு வேண்டுகின்றோம்.

# தாத்தாரிகளிடம் இஸ்லாம் பரவிய வரலாறு

(சென்றமீ 92-ம் பக்கத்தொடர்)

நாம் ஏற்கனவே கூறிய இளவரசரான துக்லக்தைமூர்கான் அதுபோது ஆக்ஸூ என்ற ஊரில் வேட்டையாடும் நோக்கமாக வந்து இருந்தார். ஷெய்கு ஜமாலுத்தீன் அவர்கள் இவ்வூருக்கு வரும்போது அவ்விளவரசர் வேட்டையாடிக்கொண்டிருந்தார். எல்லா ஜனங்களும் வேட்டையாடுவதில் கலந்துகொள்ள வேண்டும் என்று இளவரசர் கட்டளையிட்டதால், அவ்வூரிலுள்ள யாவரும் இளவரசருடன் வேட்டையாடுவதில் கலந்துகொண்டிருந்தனர். ஆனால், ஹிஜ்ரத் செய்துவரும் இவ்விருபெரியோர்களுக்கும் இளவரசரின் இவ்வுத்தரவு தெரியாததால், இவர்கள் ஜனங்களைவிட்டு அப்புறம் தனியே ஒதுங்கி இருந்தார்கள்.

இவர்கள் இவ்வாறு ஒதுங்கி இருப்பதை இளவரசர் கண்டு கோபமடைந்து, இவ்விருவரையும் பிடித்துத் தம்மிடம் கொண்டு வரும்படி தம் பணியாளருக்குக் கட்டளையிட்டார். அம்முராட்கள் இவ்விரு பெரியார்களையும் தங்களது புஜபல பராக்கிரமத்தால் பிடித்துத் தள்ளிக் கொண்டுவந்து சேர்த்தனர். இளவரசர் அவ்விரு பெரியார்களையும் நோக்கித் தமது கட்டளைப்படி, வேட்டையாடுவதில் சேர்ந்து கொள்ளாமலிருந்ததற்குக் காரணமென்ன வென்று விசாரித்தார். அதற்கு ஷெய்கு அவர்கள் "நாங்கள் அந்நிய தேசத்தார்; பரதேசிகள்; இளவரசரின் கட்டளை எங்களுக்குத்தெரியாது. ஆதலால், நாங்கள் வேட்டையில் கலந்துகொள்ளவில்லை; விஷயமறியாமல் செய்த இந்தக் காரியம் குற்றமாகாது. எனவே, நாங்கள் குற்றமற்றவர்கள்" என்று கூறினர். ஷெய்கு அவர்களுடைய இந்த சமாதான வார்த்தைகள் நேர்மையானவையாக இருந்ததால், துக்லக் தைமூர்கான் அவர்களை சிக்ஷிக்காது விடுதலை செய்தனன். ஆயினும், கோபம் மாத்திரம் தணியவில்லை. மறுபடியும் ஷெய்கு அவர்களிடம் தன்னுடைய வேட்டை நாயைச் சுட்டிக்காட்டி "இந்த நாய் மேலானதா? அல்லது நீர் மேலானவரா?" என்று வினவினன். அப்பொழுது அந்நாய், வேட்டையாடப்பட்ட பன்றியின் இறைச்சியைத் தின்றுகொண்டிருந்தது. உடனே ஷெய்கு அவர்கள் அக்கேள்விக்கு உத்தரமாக "ஈமான் என்ற ஒரு வஸ்து என்னிருதயத்தில் இருக்குமாயின், நான் அந்த நாயைப் பார்க்கினும் சிறந்தவனுவேன். ஆனால், அவ்வஸ்து என்னிடமில்லையாயின் இந்த நாய் என்னைப் பார்க்கினும் எத்தனையோ ஆயிரம் மடங்குசிறந்தது" என்றுகூறினர்கள்.

இவ்வாக்கியங்கள் ஷெய்கு அவர்களிடமிருந்து எவ்வித உணர்ச்சியுடன் வெளிப்பட்டனவென்பதை இறைவன் தானறிவான். கல்போன்ற மனமுள்ள அவ்விளங் கோமகன் மெழுகுபோல் உருகிவிட்டானுகையால், இப்பெரியார்களைத் தம்முடைய அசுவங்களின் மீதேற்றி மிகவும் கண்ணியமாகவும் மரியாதையாகவும் தமது கூடாரத்துக்கு அழைத்துவரும்படித்தமது உத்தியோகஸ்தருக்குக் கட்டளையிட்டு வேட்டையாடாமல் தமது கூடாரத்துக்குச்சென்று விட்டனன்.

ஷெய்கு ஜமாலுத்தீன் (றஹ்.) அவர்கள் துக்லக் தைமூரின் கூடாரத்துக்கு வந்து சேர்ந்தது முதல் அவ்விளங்கோமகன் தனிமையில் இருந்து சம்பாஷிக்கலாயினன். அப்பொழுது நாயைப் பார்க்கினும் சிறந்தவனுகை மனிதன் இருக்கிறுன் என்று நிர்ணயிப்பதற்குத் தாங்கள் குறிப்பிட்ட அம்சம் யாது? அதை எனக்கு விளக்கிக் கூறவேண்டுமென்று கேட்டுக்கொண்டனன். அதற்கு ஷெய்கு அவர்கள், அது இஸ்லாம் என்று கூறி, இஸ்லாத்தின் கொள்கைகளையும் அதன் முக்கிய அனுஷ்டான கிரியைகளையும், அவைகளமைக்கப்பட்ட இரகசியங்களையும் மனதிற் படியுமாறு தெளிவாக எடுத்துக் கூறினர்கள். இதைக் கேட்ட இளவரசர் தாங்கள் கூறியதன் உண்மையை நான் மனதார ஒப்புக்கொள்கிறேன்; ஆயினும், என்னுடைய அதிகாரம் தற்போதய நிலைமையில் மிகக் குறைவாக இருப்பதால் இனி யான் காக்கான் சிம்மாசனத்தமர்ந்த பின்



என்னிடம் வருவீர்களாயின் யான் இஸ்லாம் மதம் தழுவச் சித்தமாக இருப்பேன்; தாங்கள் அவசியம் வரவேண்டுமென்று வேண்டிக் கொண்டனன்.

இந்தச் சம்பாஷணை நடைபெற்ற சில நாட்களுக்குப்பின் ஷெய்கு அவர்கள், மலையின் உச்சியில் ஒரு விளக்கைப் பிடித்துக்கொண்டு நிற்பதுபோலும், அவ்விளக்கின் பிரகாசமானது அந்தப் பிராந்தியம் முழுவதும் பிரகாசிப்பது போலும் சொற்பனங் கண்டார்கள். மறுநாட் காலையில் தமது அருமைப் புதல்வர் அர்ஷதுத்தீன் என்பவரை அழைத்துத் தாம் கண்ட சொற்பனத்தைக்கூறி, "புதல்வ! யான் எண்ணெவற்றிய விளக்கைப்போலாகிக்கொண்டு வருகிறேன்; இவ்வுலக வாழ்வு என்றைக்கு முடியுமோ யானறிகிலன்; இது பொய்யான வாழ்க்கை; இதை நம்பவொண்ணுது. ஆனால், துக்லக் தைமூர் அரசபட்டம் அடைந்தபின் இஸ்லாத்தைத் தழுவுவதாகக் கூறியிருக்கிறுர்; அதுசமயம் யான் இவ்வுலகில் இல்லையென்றுல் நீர் அவருக்கு இவ்வாக்குறுதியை ஞாபகமூட்ட வேண்டும். அவர் உமது கையில் இஸ்லாத்தைத் தழுவுவது ஆச்சரியமன்று. ஆதலால் உமது மூலம் கீழ்நாடு முழுவதும் இஸ்லாமென்றஞான ஒளியினுல்பிரகாசிப்பதை இறைவன் அன்னுளிலேயேஎழுதி இருத்தல் கூடும்" என்று வஸிய்யத்துச் செய்துவிட்டு, ஷெய்கு அவர்கள் மறு உலகயாத்திரைக்கான வழியை எதிர்பார்த்துக் கொண்டே காலங்கழிக்கலானுர்கள். பின்னர், கொஞ்சகாலத்துக்குள் இவ்வுலக வாழ்க்கையை ஷெய்கு அவர்கள் முடித்துக்கொண்டார்கள்.

கி. பி. 1347-ம் வருஷத்தில் அரசாங்கத்திலுள்ள அமீர்கள் யாவரும் ஒன்று கூடி துக்லக் தைமூருக்குப் பட்டங்கட்டி விடவேண்டுமென்று ஏகமனதாக முடிவுசெய்து மிக்க ஆடம்பரத்துடன் சிம்மாசனமேற்றினர். அது முதல் அவர் நீதிநெறி முறை தவருது அரசு செலுத்திவரலானுர். துக்லக்தைமூருக்குப் பட்டங்கட்டிப் பாராண்டு புரியும் சமாச்சாரம் மௌலானு அர்ஷதுத்தீன் (றஹ்.) அவர்களுக்குத் தெரிந்தவுடன் கொஞ்சமும் தாமதியாமல் தலை நகரை நோக்கிப் புறப்பட்டார். இப்பெரியார் உலகத்துறவியாகவும் கையிற் பணமில்லாத ஒரு பகீராகவும் இருந்தாராதலின், இப்படிப்பட்டவர் அரசரிடம் எங்ஙனம் போய்ச் சேரமுடியும்? ஆகவே, வாசல் காவற்காரர்களும் மற்றவர்களும் மௌலானு அவர்களை அரசரிடம் செல்வதற்குப் பெருந்தடையா யிருந்தார்கள். எனவே, நேருக்குநேர் நியாயமான முறையில் அரசரிடம் செல்வதற்கு எவ்வித வழியுமிருக்கவில்லை. ஆயினும், மௌலானு அவர்கள் தங்களது நோக்கத்தில் உறுதியாக இருந்தார்களாதலின், பலபேர்களையும் கெஞ்சிக் கேட்டுக்கொண்டும் நடைபெருத சமாச்சாரம் ஒரு தக்பீர்முழக்கத்தினுல் கைகூடிற்று. அதாவது, மௌலானு அவர்கள் தினசரி அதிகாலையில் அரசருடைய கூடாரத்துக்குப் பக்கத்திற் சென்று உரத்த சப்தமாக 'அதான்' சொல்வதை வழக்கமாக ஏற்படுத்திக்கொண்டார்கள். மௌலானு அவர்கள் உரத்த சப்தமுள்ளவர்களாதலால் சிங்கத்தின் கர்ஜனையைப்போல் அந்தப்பிராந்தியம் முழுவதும் ஓசையிடுவது வழக்கமாகும்.

ஒருநாள் காலையில் அரசன் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தனன். மௌலானு அவர்களின் சிங்கக் கர்ஜனையை ஒத்த 'அதான்' சொல்லுகையானது அவனைதிடுக்கிட்டு முழிக்கும்படித் தட்டிஎழுப்பிற்று. அரசனுக்கு நித்திரை பங்கமேற்பட்டதால் கோபமேற்பட்டுத் தன் பணியாளரிடம் "நம்முடைய கண்ணியத்துக்குக் குறைவாகத் தினசரி நடந்துகொண்டிருக்கிற அந்தபோக்கிரியைப் பிடித்துஎன்முன்கொண்டு வாருங்கள்; அவ்விஷமி தினந்தோறும் அதிகாலையில் இவ்வாறு கூச்சலிட்டுத் தொந்தரை செய்துகொண்டிருக்கின்றனன்,என்று கட்டளையிட்டான்.

மௌலானு அர்ஷதுத்தீன் (றஹ்.) அவர்கள் 'அதான்' சொல்லி முடிவதற்குள் மொகல் குண்டர்கள் வந்து அவரைப் புடைத்து அரசரிடம் இழுத்துச் சென்றனர். காக்கான் துக்லக் தைமூர் இவரைப் பார்த்தவுடன் அதிகக் கோபமடைந்து, 'நீரியார்? தினசரி விடியற்காலத்தில் எமது கூடாரத்துக்குப் பக்கத்தில் வந்து கூச்சலிடுகிறீர்? என்னை நித்திரை செய்ய விடுகிறீரல்லீர்' என்று அதட்டிக்கேட்டனன். அதற்கு மௌலானு அவர்கள், "யான் ஒரு பெரியாரின் புதல்வன்; நீர் ஒரு சமயம் அப்பெரியாரிடம் இஸ்லாம்மதத்தை தழுவுவதாக வாக்களித்திருக்கிறீர்; எனது தந்தையார் இவ்வுலக வாழ்வினை இனிது நிறைவேற்றிக் கொண்டனர்; ஆயினும், அவர் தமது அந்திய காலத்தில் என்னைத் தம்மருகிலழைத்து, நீர் வாக்களித்திருக்கிற விபரத்தைக்கூறி, நீர் அரசரிமை அடைந்த

பின் உம்மிடம் வந்து அவ் வாக்குறுதியை நினைப்பூட்ட வேண்டுமென்று எனக்குக் கட்டளையிட்டிருக்கிறார்" என்று கூறினர்.

காக்கான் துக்லக்தைமூருக்கு அவ்வாக்குறுதி நினைவிருந்தது. உடனே தனது படுக்கையை . விட்டெழுந்து தமது ஆசனத்தில் வந்தமர்ந்து, மௌலானா அவர்களை தமதண்டையில் அமரும்படி மிக மரியாதையுடன் வேண்டிக் கொண்டதுடன் "தாங்கள் வந்ததை நான் மனதார வரவேற்கிறேன்; நான் சிம்மாசனமேறிய காலமுதல் உங்களது வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்; இப்பொழுதோ தாங்கள் வந்துவிட்டீர்கள்; இனி நான் என்ன செய்ய வேண்டுமென்பதை எனக்கறிவியுங்கள்" என்று கூறினன். உடனே அவ்வேந்தனை ஸ்நானம் செய்வித்து, "கலிமா ஷஹாதத்" சொல்லிக்கொடுத்து, இஸ்லாத்தில் சேர்த்ததுடன், "முகலிஸ்தான் இனி இஸ்லாத்தின் ஞான பொக்கிஷத்தை அடைந்துவிட்டது" என்று மௌலானா அவர்கள் கூறினார்கள்.

பின்னர்முகலாய தேசமெங்கும் இஸ்லாம் மதத்தைப் பரவச்செய்வதற்கான வழியாதென இருவரும் கூடி யோசித்தனர். தேசம் முழுவதையும் ஏககாலத்தில் மதமாற்றஞ்செய்வதில், நாட்டில் குழப்ப மேற்பட ஹேதுவுண்டு ஆகவே செல்வாக்குள்ள அமீர்களை ஒவ்வொருவராகத் தனிமையில் அழைத்து அவர்களிடம் இஷா அத்துச் செய்யவேண்டும் என்று முடிவுசெய்தனர். மறுநாட்காலையில் அமீர் பிலாஜீ அவர்களின் சகோதரரான அமீர்துலைக் என்பவர் காக்கான் துக்லக் தைமூரைப் பேட்டிகாண வந்தார். ஹஜ்றத் மௌலானா அர்ஷதுத்தீன் (ரஹ்.) அவர்களும் பக்கத்திலிருந்தார்கள். இப்புது மனிதரை இன்னர் என்று அவர் தெரிந்துகொள்ளாததால், அவர்மீது அமீர்துலைக் ஜாடையாகப் பார்ப்பதை யுணர்ந்த காக்கான் துக்லக்தைமூர் மௌலானாவை அறிமுகம் செய்துவைத்தார். அப்பொழுது அரசர், இப்பெரியாரின் ஞானோபதேசத்தால் யான் பல தெய்வ வணக்கத்தைக் கைவிட்டு ஒரே தெய்வத்தையே வணங்க வேண்டுமென்ற கொள்கையை அங்கீகரித்து இஸ்லாம் மதத்தைத்தழுவிவிட்டேன்; நீங்கள் பல தெய்வவணக்கத்தைக் கைவிட்டு இஸ்லாம் மதத்தைத்தழுவி, நபிகள் நாயகம் (ஸல்.) அவர்களின் தொண்டர்களின் கூட்டத்தில் சேர்ந்துகொண்டால் எவ்வளவு நன்ருக இருக்கும் என்று தமது அபிப்பிராயத்தை அறிவித்தார்.

அமீர்துலைக் இவ்வார்த்தைகளைக் கேட்டவுடன் கண்களில் நீர் ததும்ப அழுதார். சொற்ப நேரத்துக்குப் பின் 'அரசே! யான் இஞ்ஞான சூரியனின் கிரணங்களை இதற்கு முன்னரே அடைந்துளன்; மூன்று வருடங்களுக்கு முன்பிருந்து யான் முஸ்லிமாகத்தானிருக்கிறேன்; நான் காஷ்கரிலிருக்கும் பல் முஸ்லிம் பெரியார்களைச் சந்திக்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது; வழிதவறி இருந்த எனக்கு முக்திக்கான பாட்டையை அவர்கள் காண்பித்திருக்கின்றனர்; அந்தக் காலம் முதல் இன்றுவரை யான் முஸ்லிமாகத்தானிருந்து வருகிறேன்; தங்கள்பால் எனக்குள்ள பயத்தின் காரணமாக நான் என்னுடைய கொள்கையைப் பகிரங்கமாகக் கூற முடியாதவனாக இருந்தேன்; இல்லையேல் இதற்கு முன்னரே யான் என்னை முஸ்லிம் என்று பகிரங்கமாகக் கூறி இருப்பேன்" என்று கூறினர். இதைக் கேட்டவுடன் காக்கான் துக்லக் தைமூர்கான் சந்தோஷத்தின் மேலீட்டால் அமீர்துலைக்கை ஆலிங்கனம் செய்து முதவெடுப்பிலேயே இறைவன் இஷாஅத்தே இஸ்லாம் வேலைக்கு மிகவும் செல்வாக்குள்ள தலைவரைத் தமது வலது கையாகக் கொடுத்தற்காக இறைவனுக்கு நன்றி செலுத்தினர்.

இம்மாதிரி முகலிஸ்தானிலுள்ள எல்லா அமீர்களையும் காக்கான் துக்லக் தைமூர்கான் தனித்தனியே கண்டு பேசி இஷாஅத்தே இஸ்லாம் பிரசாரம் செய்து தலைவர்களனைவரையும் முஸ்லிமாக ஆக்கிவிட்டார். ஆனல், அமீர் ஜர்ராஸ் என்ற ஒரு தலைவர் மாத்திரம் மௌலானா அர்ஷதுத்தீன் (ரஹ்.) அவர்களின் இஸ்லாமிய அழைப்பை ரத்துச் செய்துவிட்டார். ஆயினும், அரசரிடம் அவருக்குள்ள செல்வாக்கின் காரணமாகக் கண்ணியமான முறையில் மறுதளித்தார். அதாவது, மௌலானா அவர்கள், என்னுடைய சமஸ்தானத்து மல்வீரன ஸாதுக்னி என்பவனுடன் மல்யுத்தம் செய்து ஜெயிப்பாராயின், அவரதுசொற்கேட்டு இஸ்லாத்தைத் தழுவுவன். இதல்லாமல் அவர் ஆயிரம் விதமான யுக்திப் பிரமாணங்களைக் கூறிடினும் அவைகளை யான் ஒப்புக்கொள்ளேன் என்று கூறினர். இவருடைய இந்த நிபந்தனையை அரசரும் இதர அமீர்களும் ஏற்றுக்கொள்ள இஷ்டப்படவில்லை. மௌலானா அவர்கள் மல்யுத்தத்தில் வெற்றி பெருவிடில் அதனல் இஸ்லாம் மதம் பொய்யாகி விடுமாதலால் இது புத்திசாலித்தனமான நிபந்தனையாகாது ஆகவே இதனை ஏற்றுக்கொள்ள முடியாது என்று கூறினர்கள்.



இவ்விதமான சம்பாஷணை நடந்து கொண்டிருந்தபோது மௌலானா அவர்கள் குறுக்கிட்டு, இந்த நிபந்தனையை ஒப்புக்கொள்கிறேன்; அது எனக்குச் சம்மதம் என்றுகூறி வாக்குவாதம் செய்வதை நிறுத்தினர்கள். மௌலானா அவர்கள் இவ்வாறு கூறியதைக்கேட்ட அமீர் ஜர்ராஷ் நகைத்து,, என்னுடைய பயில்வானை இன்னர் என்று நீர் அறிந்து கொள்ளாமல் கூறுகிறீர் போலிருக்கிறது. இரண்டு வருஷம் கழிந்த ஒட்டகைக் குட்டியை அவன்சுலபமாகக் கையில் தூக்கிக்கொண்டு செல்வது அவனுடைய இடது கையின் வேலையாகும். அவனுடைய உயரம் கூட, பொதுவாக எல்லா மனிதர்களைப் பார்க்கினும் ஒரு அடி அதிகமாகவே இருக்கிறது. இன்றுவரை ஒருவரும் அவனைத் தோற்கடித்ததில்லை என்று கூறினர். அதற்கு மௌலானா அவர்கள், "இந்த முகலிஸ்தானில் குப்று ஒழிந்து, இஸ்லாம் என்ற ஞான ஒளி பரவவேண்டுமென்பது இறைவனின் நாட்டமாக இருப்பின், எனக்கு அவனைத் தோற்கடிக்கத்தகுந்த பலத்தையும் வல்லமையையும் அவ்விறைவன் அளிப்பான்; நான் அவனைத் தோற்கடித்து வாகைமாலை சூடுவன்" என்று மட்டிலும் பதிற் கூறினர்கள்.

காக்கான் துஃலக் தைமூருக்கும், அமீர்களுக்கும் மௌலானா அவர்கள்ஒப்புக்கொண்ட இம்மல்யுத்தம் திருப்தியளிக்கவில்லை. ஆயினும், மௌலானா அவர்கள் இதில் தைரியமாகக் கூறிவிட்டதால், அவர்கள் இதைத் தடைசெய்யாது இருந்து விட்டனர். காக்கானுடைய கூடாரத்துக்குப் பக்கத்திலுள்ள சமமான ஒரு வெளியில் குஸ்தி செய்வதற்காக கோதா வெட்டி ஒழுங்கு செய்யப்பட்டு, குஸ்தி செய்வதற்காக ஒரு தேதியும் குறிப்பிடப்பட்டது. இவ்வாச்சரியமான மல்யுத்தம் நடைபெறும் சமாச்சாரம் அப்பிராந்தியம் முழுவதும் பறை யறைவிக்கப்பட்டதால், இந்தக் குஸ்தியைப் பார்ப்பதற்காக ஆயிரக்கணக்கான ஜனங்கள் வெளியிடங்களிலிருந்து கூட்டங்கூட்டமாக வந்து சேர்ந்தனர். குறித்த நேரத்தில் ஜோடிகளிருவரும் கோதாவிலிறங்கினர். ஜனங்கள் யாவருடைய கண்களும் பயில்வான்களின் பக்கல் நோக்கிய வண்ணமாகவே இருந்தன. அந்த மைதானத்தில் எள் விழ இடமில்லாமல் அவ்வளவு பிரமாண்டமான கூட்டம் கூடி இருந்தது.

மிகவும் உயரமுள்ள பயில்வானுன லாதுக்னி பகா என்ற அம்மனிதன் தனது புஜபல பராக்கிரமத்தில் இறுமாப்புக் கொண்டு மிக ஆடம்பரமாகத் துள்ளிக்குதித்துத் தனது மல்யுத்த வித்தைகளையும் செய்து கொண்டு கோதாவின் ஒரு பக்கலில் இறங்கினன். காபிரான ஜனங்கள் யாவரும், தங்களது வீரப்பயில்வான் ஒரே பிடியில் மௌலானாவைக் கால்வேறு கைவேறாகக் கிழித்தெறிந்து விடுவான் என நினைத்துக் கொண்டு பேராசையுடன் உற்றுநோக்கிய வண்ணமிருந்தனர். மறுபக்கல் சத்தியத்துக்காகத் தலைவணங்கிய பெரியார் அர்ஷதுத்தின், அல்லாஹ்வின் சன்மார்க்கத்துக்காக மல்யுத்தம் செய்யும் நோக்கங்கொண்டு மெலிந்த உடலுடன் கோதாவிலிறங்கினர். முஸ்லிம்கள், மௌலானா அவர்களின் மெலிந்த திரேகத்தையும், குஸ்திப் பழக்க மின்மையையும் கண்டு சந்தேகக் கண்ணுடன் குழம்பிய மனத்தவராக நின்றுகொண்டிருந்தனர். ஆயினும், இருவீரர்களும் ஒருவரை ஒருவர் நெருங்கிவந்து கைகொடுத்தவுடன் கைபர் வீரரின் காக்ஷி இங்கு யாவருக்கும் புதுப்பித்துக் காட்டப்பட்டது. அதாவது, ஹஜ்றத்அலீ (றலி.) அவர்களும், மர்ஹப் என்ற பயில்வானும் மல்யுத்தம் செய்தகால், ஹஸ்ரத் அவர்கள் ஆயிரம்பேர்களை ஏககாலத்தில் வென்ற காக்ஷியின் நமூனு யாவருடைய கண்களிலும் தென்பட்டது. அல்லாஹு தஆலா தனது மதத்தின் கண்ணியத்தைக் காக்கும் பெருமைதான் என்னே! மௌலானா அவர்கள் குனிந்து ஒரு வட்ட மிட்டு ஓரேபிடியில் அப்பெரும் பயில்வானைக் கரணம்போட்டுக் கீழே விழும்படி புறட்டி யடித்தார்கள். அவன் செத்த பிணம் போல் பூமியின்மீது மல்லாந்து விழுந்தனன். முஸ்லிம்கள் யாவரும் சந்தோஷமேலீட்டால் அல்லாஹு அக்பர் என்ற தக்பீர் முழக்கத்துடன் ஆரவாரம் செய்ததானது, வானைப்பிளந்து செல்வதாக இருந்தது. எனவே, அங்குவந்திருந்த காபிர்களனைவரும் மௌலானா அவர்களின் குஸ்தியின் அற்புதத்தை மெச்சி இறைவனுக்குத் தலைசாய்த்தனர்.

அன்றைய தினத்தில் மட்டும் ஒரு 1,50,000 பேர் கலிமா ஷஹாதத்துச் சொல்லி இஸ்லாத்தின் வட்டத்தினுட் சேர்ந்தனர்.

எனவே, ஜமாலுத்தீன் அப்கானீ (றஹ்.) அவர்கள் அன்று கண்ட சொற்பனம் அவரது அருமைப்புதல்வர் மௌலானா அர்ஷதுத்தீன் (றஹ்.) அவர்கள்மூலம் மெய்யாயிற்று. எனவே, அன்றுமுதல் துருக்கிஸ்தானில் இஸ்லாம்மதம் வெகு துரிதமாகப் பரவி தேசம் முழுவதையும் தனக்குக் கீழ்ப்படுத்திக் கொண்டது. அன்று பரவிய இஸ்லாம் இன்றும் அத்தேசத்தில் நின்றிலங்கிக் கொண்டிருக்கிறது. அங்கு தோன்றிய ஜனங்கள் தாம் இந்தியா, அப்கனிஸ்தானம், பாரசீகம் முதலிய தேசங்களை எல்லாம் ஜெயித்து இஸ்லாத்தின் கண்ணியத்தையும் கீர்த்தியையம் இவ்வுலகில் நிலைநிறுத்த அரும்பாடுபட்டிருக்கிறார்கள். நமது இந்திய நாட்டில் ஏற்பட்ட இஸ்லாமிய ஆட்சியின் பெரும்பாகம் அந்நாட்டு மக்களின் ஆட்சியேயாகும்.

---

# 'விஞ்ஞானம்

## இன்றைக்கு 50 வருஷங்களுக்குப்பின்

இற்றைக்கு 40 அல்லது 50 வருஷங்களுக்குப்பின் இவ்வுலகத்தின் நிலைமை எவ்வாறிருக்கும்? இப்பொழுது நாமிருந்து கொண்டிருக்கும் இவ்வுலகம் அப்பொழுது எவ்விதமான உலகமாக இருக்கும் என்ற கேள்வி விஞ்ஞான சாஸ்திரிகளுக்குள் உண்டாகி இருக்கிறது. இவ்வினவுக்குப் பதில் கூறுவது அவ்வளவு கஷ்டமல்ல. சென்ற 40—50 வருஷங்களுக்கு முன் இவ்வுலகமிருந்த நிலைமையையும், இப்பொழுது இவ்வுலகிலேற்பட்டுள்ள மாறுதல்களையும், இதற்குள் மனிதரின் அறிவுவளர்ச்சியும் நாகரீக முன்னேற்றமும் விரைந்து செல்லும் போக்கையும் நாம் சிந்தித்துப் பார்ப்பதுடன், தற்போதுள்ள உலகின் போக்குடன் ஒப்பிட்டுப் பார்ப்போமாயின், 40 அல்லது 50 வருஷங்களுக்குப்பின் இவ்வுலகம் எந்நிலைமையிலிருக்கும் என்று யூகித்துக் கொள்வது ஒரு பெருஞ்சிரமமான காரியமன்று.

இன்று நாம் மின்சார ஒளியைப்பற்றி பெருமை கொண்டாடுகிறோம். ஆயினும், நமக்கு அதனால் இப்பொழுது 100க்கு 5 விகிதம்தான் லாபம் கிடைக்கிறது. அதாவது, 100 பவுன் அதற்காகச் செலவு செய்வோமாயின் அதனால் 5 பவுன்களைத்தான் நன்மையாக அடைகிறோம். பாக்கியுள்ள 95 பவுன் விருதாவாகி விடுகிறது. ஆனால், வருகிற 1984-ல் நூற்றுக்கு நூறு பங்கு லாபம் கிடைக்கவில்லை என்றாலும், நூற்றுக்குப் பத்து விகிதமேனும் நமக்கு அப்பொழுது லாபம் கிடைக்கத்தான் செய்யும். இதனால், நமது சுகத்துக்கும் சௌகரியத்துக்கும் தக்க வசதிகளேற்பட்டுவிடும். உலகில் வேலைகள் எவ்வளவுக்கு துரிதமாக நடைபெறுகிறதோ அவ்வளவுக்கு மக்கள் தங்களுடைய காலத்தின் அருமையை உணர்ந்துகொள்வர்; தங்களுடைய அலுவல்களை வெகுதுரிதத்தில் முடித்துக்கொள்ள வேண்டுமென்று விரும்புவர்.

### இனி என்ன நடைபெறும்?

இக்காலத்தில் மூடுபனி, மழை புயல் முதலியவைகளின் காரணமாக நம்முடைய நேரங்களில் அநேக பாகம் வீணாகக் கழிந்து விடுகிறது. ஆனால், 40-50 வருஷங்களுக்குப்பின் அவ்வாறு வீணாகாது. விஞ்ஞான சாஸ்திரத்தின் உதவியால், மூடுபனியை ஒழித்துவிடலாம். காலநிலையின்மீது நமக்குப் பூரணமான ஆதிக்க மேற்பட்டுவிடும். குறித்த நேரத்தில் மழை பொழியும். குறித்த நேரத்தில் வெய்யலுண்டாகும். குறித்த நேரத்தில்தான் குளிர் உண்டாகும். இயற்கை இத்திட்டத்திற்கு மாறு செய்தாலும், இம்மாற்றத்தால் எவ்வித இடஞ்சலும் ஏற்படாதவாறு மனிதன் தன்னுடைய காரியத்தை நிர்வகித்துக்கொள்வான். நூதனமாய்ப் பேசும் கருவிகள், மிகவும் துரிதமாகச் செல்லும் வண்டிகள் உண்டாகிவிடும். பட்டிணங்கள் நூற்றுக் கணக்கான சதுரமையில் விஸ்தீரண முள்ளதாகிவிடும். கிராமங்கள் என்ற பெயர் கூட எடுபட்டுவிடும். கிராமங்களிலுள்ள சுத்தக்காற்று, கிராமங்களிலுள்ள பழவர்க்கங்கள், கிராமங்களிலுள்ள சௌகரியங்கள், கிராமங்களிலுள்ள சுத்தமானஜலம் ஆகியவைகளெல்லாம் நகரத்திலுண்டாகிவிடும். நகரங்களில் இப்பொழுதிருக்கிற கஷ்டங்கள் இனி இருக்காது. ஒவ்வொருவருக்கும் தனித்தனி வீடுஇருக்கும். ஒவ்வொரு வீட்டுக்கு மிடையில் பூந்தோட்டமிருக்கும். சினிமா, நாடகம், தொழிற்சாலைகள், ரயில்வே ஸ்டேஷன்கள் ஆகியவைகள் தனித்தனி இடத்தில்இருக்கமாட்டா? நகரங்களின் மத்தியில் ஆங்காங்கு ஆகாயவிமானங்களிறங்குவதற்கான திறந்த மைதானங்களிருக்கும். ஆகாய விமானங்கள் துவிச் சக்கிரவண்டிகளைப்போல் எங்கும் பரவி, யாவரும் சுலபமாக உபயோகிக்கத் தக்கதாகிவிடும். டெலிபோனுக்கு அவசியமே இருக்காது. ஒவ்வொருவருடைய ஜேபியிலும் ரேடியோ கருவி இருக்கும். நடக்கும்போதும், உட்காரும்போதும், ஒவ்வொரு சமயத்திலும் எல்லா இடத்திலும் எல்லாருடனும் பேசிக்கொள்வதற்கான சௌகரியமேற்பட்டுவிடும். சம்பாஷணை செய்வதற்கு டெலிபோன் உபயோகிக்கப்படாமல் தமாஷ் பார்ப்பதற்காக அவைகள் உபயோகிக்கப்படும்.

### நூதனக் கருவிகள்

பூமிக்குள் ரயில் பாதைத் தொடர்கள் அதிகரித்துவிடும். கடலுக்குள்ளும் மனிதன் சுகமாகப் பிரயாணம் செய்வதற்குத் தகுந்தவாறு சமுத்திரத்தின் அடியிலும்கூடப் பாதைகள் போடப்பட்டு விடும். காலையில் எழுந்தவுடன் உலகத்திலுள்ள சகலகாரியங்களையும் ரேடியோ மூல்மாக மனிதர்கள் கேட்டுத் தெரிந்துகொள்வர். சமாச்சாரப் பத்திரிகைகள் படிக்க வேண்டிய அவசியமிருக்காது. பத்திரிகை படிப்பவர்களே இல்லாதிருப்பர் என்றுங் கூறலாம். சமாச்சாரப் பத்திரிகைகளுக்குப் பதிலாக கிராப்போனைப்போல் சமாச்சாரங்களைக் கூறும்படியான ஒருவகைக் கருவிகள் உண்டாகிவிடும். இன்னும் இருபது வருஷங்கள் வரை பத்திரிகைத் தொழில் இருந்து வருவது கஷ்டம். எந்த மனிதனும் ராஜீய வாழ்க்கை, சமுதாய வாழ்க்கை ஆகியவைகளைவிட்டு ஒதுங்கி இருக்க முடியாது. இவ்வாழ்க்கையில் ஈடுபடும்படி ஒவ்வொருவரும் நிற்பந்தப் படுத்தப்பட்டவர்களாகி விடுவார்கள். வருங்காலத்தில் மனிதருக்குக் கெட்டியான வஸ்திரத்துக்குத் தேவை இருக்காது. ஒவ்வொருவரும் மிருதுவான துணிகளையே அணிவர். பனிகால மேற்படும் போது மின்சாரசக்தியைக் கொண்டு கதகதப்பு உண்டாக்கிக் கொள்ள முடியும். சமையல் செய்வதால் பல மணிநேரத்தை வீணாகக் கழிவதை மனிதன் சகித்துக் கொண்டிருக்க மாட்டான். சாப்பிடுவதிலும் பல நிமிஷங்கள் செலவாகுவதை அவன் சகிக்கமாட்டான். சாப்பாட்டுக்குப் பதிலாக வேறெதையும் ஹோட்டல்களில் உற்பத்தியாகும்படிச் செய்து, ஹோட்டல்களிலிருந்தே அவைகளை வரவழைத்து அருந்திக் கொள்வர். ஆதலால், வீடுகளில் சமையல் செய்வது அடியுடன் நின்றுவிடும்.

### ஸ்திரீகள் முன்னேற்றம்

ஸ்திரீகளின் அந்தஸ்து மிகவும் முன்னேற்றமடைந்துவிடும். சகல காரியத்திலும் ஸ்திரீகள் ஆடவர்களுடன் சமஅந்தஸ்து உள்ளவர்களாக ஆகிவிடுவர். குழந்தை பிறப்பதற்கு முன்னரே கற்பத்திலுள்ள சிசு ஆணா பெண்ணா என்பதை அறிய பிரயத்தனஞ் செய்யப்படும். ஸ்திரீகளுக்கு வீட்டு வேலைகளிலிருந்து விடுதலை கிடைத்துவிடும். இதர காரியங்களில் முன்னேறுவதற்காக அதிக சிரத்தை கொள்ள அவர்களுக்குச் சாவகாசம் கிடைக்கும். ஸ்திரீகளுக்கு இன்னும் பல சௌகரியங்கள் ஏற்பட்டுவிடும்.

இவையாவும் நடைபெறும். ஆனால், மனிதன் விஞ்ஞான சாஸ்திரத்தை முன்னேற்றத்துக்கு கொண்டுவந்து, தற்போது அவனுடைய அழிவுக்குக் காரணமாக இருக்கிற இவ்விஞ்ஞான ஆராய்ச்சிகளை அவனுடைய முன்னேற்றத்துக் காரணமானதாக ஆக்கிக்கொள்வான்.

## மனிதன் தூங்காதிருப்பானா?

ஐரோப்பா, அமெரிக்காவிலுள்ள நிபுணர்கள் நித்திரையைக் குறைப்பதற்கான முயற்சியில் ஒரு காலமாக ஈடுபட்டிருக்கிறார்கள். நித்திரையின் காரணமாக திரேகத்திற்கு ஒருவிதமான சுகம் உண்டாகிறது என்பது வெளிப்படை. மூளைக்கும், ஸ்தூலத்துக்கும் ஏற்பட்டுள்ள களைப்பை நீக்குவதற்கு நித்திரையில்லாமல் முடியாது என்பது தெரிந்த விஷயம். ஆயினும், மனிதனின் வாழ்நாளின் ஒரு பகுதி நித்திரையினால் விருதாவாகக் கழிந்துவிடுகிறது என்பதிற் சந்தேகமில்லை. தினசரி 7 அல்லது 8 மணி நேரத்தில் தன்னுடைய அலுவல்களனைத்தையும் விட்டுவிட்டு நித்திரை செய்யும்படி மனிதன் நிர்ப்பந்திக்கப் பட்டவனாக இருக்கிறான்.

சில பெரிய மனிதர்கள் தங்களுடைய நித்திரை காலத்தைக் குறைத்துக்கொண்டு அதுவல் பார்த்ததுதான் அவர்களை அவ்வுயரிய பதவிக்குக் கொண்டுவந்ததற்குப் பெரும் காரணமாக இருக்கிறது. இவர்கள் தினசரி மூன்று அல்லது நான்குமணி நேரம்தான் நித்திரை செய்வார்கள் என்று நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். நெப்போலியன் போனபார்ட் உலகத்திலுள்ள சிறந்த தளகர்த்தர் என்று உலகம் ஒப்புக்கொண்டிருக்கிறது. அவர் தேசங்களை மிகத் திறமையுடன் கைப்பற்றும் வீரம் பராக்கிரமம் உலகமறிந்த உண்மை. யுத்த காலங்களில் யுத்த சம்பந்தமான ஆலோசனையில் ஈடுபட்டுளத்தனையோ இரவுகளைத் தூங்காமல் கழித்திருக்கிறார். யுத்தம் இல்லாமல் சமாதானமாக இருக்கும் காலங்களில் நாலைந்து மணிநேரம் தான் அவர் தினசரி நித்திரை செய்வார். அமெரிக்காவிலுள்ள அடிசன், நூதனக் கருவிகளைக் கண்டு பிடிப்பதில் பெயர் பெற்றவர். இவ்விஷயத்தில் இவருக்குள்ள திறமை யாவரும் அறிவர். அவர் இரவுபகல் இருபத்து நான்கு மணி நேரத்தில் மூன்றுமணி நேரம் தான் தூங்குவார். இருபத்தோருமணி நேரம் தன்னுடைய ஆராய்ச்சியில் கழிப்பார். இதுபோலவே ஔரங்கசீப் சக்கிரவர்த்தி, பொடரிக் தி கிரேட், கான்ட், ஷேலர் ஆகியவர்கள் மூன்று நான்கு மணிநேரம்தான் தினசரி நித்திரை செய்பவர்களாக இருந்தனர். இதற்கு மேல் அதிகமாக அவர்கள் தூங்கியதாகத் தெரியவில்லை.

இன்று, மேனுடானது இறந்தகாலத்தைப் பார்க்கினும் அதிகமாக அறிவாற்றலை உபயோகித்துக் கொண்டிருக்கிறது. தினசரி ஆறுமணி நேரம் மட்டிலும் தூங்குவதற்காக ஏற்படுத்திவிட்டுப் பாக்கி பதினெட்டு மணி நேரத்தை முழிப்பில் கழிக்க ஏற்பாடு செய்யவேண்டுமென்றும், இதனுல் மனித சுகத்துக்கு எவ்வித இடைஞ்சலும் வராதென்றும் முயலுகிறது. இதற்காக, நித்திரையில் அந்தரங்க சக்தியாது? நித்திரையுண்டாகுவதால் திரேகத்தின் களை தீருவதற்கான காரணம் யாது? என்பதைக் கண்டுபிடிப்பதில்தான் இன்னம் அவர்களுக்குச் சிரமமேற்பட்டுக் கொண்டிருக்கிறது. இவ்விஷயம் அவர்கள் புத்தியில் இன்னும் எட்டவில்லை. ஆனுல் நித்திரை செய்யும்போது மனிதனின் தலை கனமற்றதாகவும், உடலம் அதிகக் கன்முள்ளதாகவும் இருப்பதாகக் கண்டு பிடித்திருக்கிறார்கள். இதனுல், தலையின் பக்கல் ரத்த ஓட்டம் குறைவுபடுகிறது என்பது வெளியாகின்றது. ஆனுல், இதைமட்டும் கண்டு பிடித்துவிடுவதால் இந்தச் சிக்கலான விஷயம் எவ்வாறு வெளிப்படமுடியும்? அவ்வாறிருந்தும், மேனுட்டார் இவ்விஷயத்தில் தங்களுடைய ஆராய்ச்சியைவிடாமல் செய்தே வருகிறார்கள்.

கில்ட்ஸ்மென் என்ற பிரபல டாக்டர் ஒருவர், இருவரை 115 மணிநேரம் தொடர்ச்சியாக நித்திரை செய்யவிடாமல் வைத்திருந்து, அவ்விருவரின் ரத்த ஓட்டத்தையும், இயற்கைச் சூட்டையும் பரிசோதனை செய்துபார்த்து, அவைகளில் எவ்விதமாறுபாடும் ஏற்படவில்லை என்று அவர் கூறுகிறார். நித்திரை மனிதருக்கு அவ்வளவு அத்தியாவசியமான காரியமல்லவென்பதுதான் ஷை டாக்டரின் அபிப்பிராயம். மனிதன் வேலைசெய்து களைத்துவிடுவானுயின் அவனுடைய அவயவங்கள் தானுக நித்திரை செய்து விடுகிறது. இதனுல்தான், நோயுற்ற மனிதர்கள் மிகக் குறைவாக நித்திரை செய்கிறார்கள் என்று அந்த டாக்டர் கூறுகிறார்.

மூளையில் ஒருவிதமான ரசாயன மாறுபாடு உண்டாகுவதற்குத்தான் நித்திரை என்று பெயர் சொல்லப்படுவதாகவும், இம் மாறுபாடு ஒரு விதமான மின்சார சக்தியினுல் உண்டாகிறதென்றும், ஆதலால், செயற்கை மின்சார சக்தியால் மூளையில் அந்தமாறுபாட்டை யுற்பத்தி செய்து விட்டால் நித்திரைக்கு அவசியமே இருக்காது என்றும் டாக்டர் மேயரஸ் என்பவரும், டாக்டர் கிரேல் என்பவரும் கூறுகிறார்கள். புரோபஸர் ஆர்தர் காட்டன் என்பவர் இந்த விதியை முதன்மையாகக் கொண்டு, இதற்காக ஒரு கருவி தயார் செய்திருக்கிறார். இது மூளையில் மின்சார சக்தியைப் பிரயோகித்து நித்திரை வராமற் செய்து விடுகிறது. பகல் முழுதும் கஷ்டப்பட்டு வேலை செய்த மனிதரின் தலையில் இந்தக் கருவியின் ஒரு கம்பியைச் சுத்தியும் மற்ருெரு கம்பியை அவருடைய தலையில் ஒட்டிக்கொண்டிருக்கும்படியும் செய்யப்படுகிறது. பிறகு பட்டனை அழுத்திப் பதினைந்து நிமிஷநேரம் அவருடைய தலையில் மின்சாரசக்தி விடப்படுகிறது. இதற்குப் பிறகு அம்மனிதர் 24 மணி நேரம்வரை நித்திரையின் அவசியத்தை உணருவதே இல்லை. தினசரி இந்தக் கருவியை உபயோகித்தால், இதனுல் மூளைக்கு ஏதேனும் கெடுதியுண்டாகுமா என்ற ஆராய்ச்சி இன்னும் பாக்கியாக இருக்கிறது. இந்த ஆராய்ச்சி வெற்றியடைந்து, இக்கருவி உபயோகிக்கப் பட ஆரம்பமாகி விட்டால், மனிதவாழ்க்கையில் ஒரு பெரும் மாறுதல் ஏற்பட்டுவிடும் என்பதிற் சந்தேகமில்லை.

---



# ஆசிரியர் குறிப்பு

## அரசாங்கப் பள்ளிக்கூடங்களில் மார்க்கல்வி

முஸ்லிம்களுக்கு மார்க்கக் கல்விதான் பிரதானம் என்பதும், உலகில் முஸ்லிம்களுக்கும் மற்றைய சமூகத்தாருக்கும் இடையில் உள்ள வித்தியாசம் இஸ்லாமியக் கொள்கையும் இஸ்லாமிய நடையுமே யாகுமாதலால், இஸ்லாம் மாக்கத்தைப்பற்றிய கல்விகளை தங்கள் சிறுர்களுக்குப் போதிப்பதை முஸ்லிம்கள் முதன்மையாகக் கருதுகிறார்கள் என்பதும் மறுக்க முடியாத உண்மையாகும். நமது நாட்டில் இஸ்லாமிய அரசாங்கமிருந்த காலத்தில், அரசாங்கத்தாரால் நடத்தப்பட்ட ஸ்கூல்கள், கல்விச்சாலைகள் முதலியவைகளில் இஸ்லாமியக் கல்விகள் போதிக்கப்பட்டு வந்ததால், முஸ்லிம்கள் ஏராளமாக அப்பாடசாலைகளிற் சென்று கல்வி பயின்று வந்தனர். ஆனுல், துரதிர்ஷ்டவசமாக இப்பொழுது நமது நாட்டில் இஸ்லாமிய அரசாங்கமில்லாததால் மார்க்கக் கல்விக்கு அரசாங்க ஆதரவு ஏற்படுவதற்கில்லாமலிருந்தது. இதனுல், முஸ்லிம் மாணவர்கள் தனிப்பட்ட பிரைவேட் மதரசாக்களில் கல்வி கற்கச்செல்லவேண்டியிருந்ததால், அரசாங்கத்துப்பள்ளிகூடங்களுக்கு அதிகமாகச் செல்வதற்கில்லை. தவிரவும், மார்க்கக்கல்வி பிரதானமாக இருப்பதால் அரசாங்கப் பள்ளியில் பயிலும் மாணவர்கள் மேல் வகுப்புகளில் சேராமல் இடையில் படிப்பை ஓரளவில் நிறுத்திவிட்டு மார்க்கக்கல்வி பயிலுவதிலீடுபட்டு, அப்பால் படிப்பையே நிறுத்தி விடுகிறார்கள். இவ்வித காரியங்களால் நமது முஸ்லிம் சமூகத்தில் பொதுக்கல்வி அதிகம் பரவ ஹேதுவில்லாமலிருந்தது. இக்குறையை நமது காருண்ய கவர்ன்மெண்டார் கவனித்து, இதற்கு யாது பரிகாரம் செய்ய வேண்டும் என்பதை உணர்ந்து அறிவிக்கும்படி ஒரு கமிட்டி ஏற்படுத்தினர். அக்கமிட்டியார் அரசாங்கப் பள்ளிக்கூடங்களில் மார்க்கக் கல்வியும் போதிக்க ஏற்பாடு செய்வது இக்குறையை வெகு தூரத்துக்குப் பரிகாரம் செய்யுமென்று அரசாங்கத்தாருக்கு அறிவித்தனர். அரசாங்கத்தாரும் இதனை ஏற்றுக்கொண்டு அதற்குப் பரிகாரம் செய்ய முன் வந்தனர். ஆயினும், பிரசமூகத்தாரின் சிலரது முயற்சியின் பயனுக இது உடனே அமல் நடத்த முடியாமற் போய்விட்டது. ஆயினும், இதுபோது அரசாங்கத்தார் மார்க்கக்கல்வியைப் போதிப்பதற்காக இவ்வருஷத்தைய பட்ஜட்டில் திட்டம் போட்டிருப்பதைப்பார்த்துச் சந்தோஷப்படுகிறோம். ஆயினும், ஒரு விஷயத்தை இவ்விடத்தில் குறிப்பிட விரும்புகிறோம். மார்க்கக் கல்வி போதிக்க வசதி ஏற்படுத்துவதாகக்கூறி மார்க்க விஷயத்திலதக்க பாண்டித்துவமும், திறமையுமில்லாதவர்களைச் சொற்பகூலிக்கு அமர்த்திச் சில நிமிஷநேரங்கள் மாத்திரம் போதிக்க ஏற்பாடு செய்வதில் உத்தேச பலன் ஒன்றும் விளையாது. மார்க்கக் கல்வியைப் போதிப்பதற்காகத் தக்க திறமையும் தகுதியும் வாய்ந்த மார்க்க அறிஞர்கள் நியமிக்கப்படுகிறார்களா? மார்க்கக்கல்வி மாணவர்களிடம் எவ்வாறு பரவுகிறது? என்பனபோன்ற விஷயங்களைக் கவனித்து, மார்க்கக் கல்வியில் மாணவர்களுக்கு நல்ல தேர்ச்சி ஏற்படுவதற்கான வழியையும் செய்ய அரசாங்கத்தார் முயற்சி செய்தல்வேண்டும் என்பதை அறிவித்துக் கொள்கிறோம். இது சம்பந்தமாக ஆங்காங்குள்ள மார்க்க பக்தர்களும் சன்மார்க்கர்களும் அதிக அக்கரை செலுத்தி, அரசாங்கத்துக்கு இதில் சிரத்தை ஏற்படுமாறு செய்வதுடன், ஸ்தலங்களிலுள்ள ஸ்கூல்களில் மார்க்கக்கல்வி போதிக்கப்படும் போக்கையும் கவனித்துக் கொள்ளல்வேண்டும். ஏனெனில், நமது நாட்டில் ஆங்காங்கு சிலச் சில நாத்தீகப் போர்வழிகளும், காதியானிவாடையுடைய கூட்டத்தாரும் இருப்பதால், இவர்கள்

சூழ்ச்சிசெய்து, பள்ளிமாணவர்களின் உபாத்தியாயர்களாக அமர்ந்து நமது இளஞ்சிரார்களின் மாசற்ற இருதயத்தில் வழிகெட்ட கொள்கையை உற்பத்தி செய்து விடாமற் கவனித்துக்கொள்வது பெற்றோர்களின் கடமையாகும். ஸகூல் தலைமை உபாத்தியாயர்களும் மார்க்கக்கல்விக்கு உபாத்தியாயர்களை நியமிக்கும்போது, தங்கள் மாணவர்களின் பெற்றோர்களையும் தலைவர்களையும் கலந்து தக்கவரை—சன்மார்க்கப்பற்றுள்ள வரை உபாத்தியாயராக நியமிப்பார்களாக. அரசாங்க உத்தியோகஸ்தர்களும் பள்ளிக்கூடத்தலைமை உபாத்தியாயர்களும் பெரும்பாலும் முஸ்லிம் அல்லாதாராக இருப்பதால், அவர்கள் சட்டையும் குல்லாயும் உள்ள ஒருவரைப் பிடித்து அந்த ஸ்தானத்தில் நியமித்து விடக்கூடும். காதியானிகளிலும், நாத்திகர்களிலும் சட்டையும் குல்லாயும் வைத்து, முஸ்லிம் வேடம் பூண்டவர்களுக்குப் பஞ்சமில்லை. ஆதலால், நிருவாகிகள் மதப்பற்றுள்ள முஸ்லிம்கள் யார் என்பதை சரியாக உணர்ந்து கொள்ள முடியாமல், காதியானிவாடையுடையவர்களையும், நாத்திகர்களையும் முஸ்லிம் என மதித்து, நியமனம் செய்துவிடல் முடியும். ஆதலின், இவ்விஷயத்தில் முஸ்லிம் தலைவர்களும் பெற்றோர்களும் ஜாக்கிரதையாக இருக்கும்படி அறிவித்துக்கொள்வதுடன் முஸ்லிம் மாணவர்களுக்கு மார்க்கக்கல்வி போதிக்க முஸ்லிம் வேடம்பூண்ட காதியானிக்கொள்கையுடையவர்களையோ நாத்திகர்களையோ நியமிக்காது மார்க்க பக்தியுள்ள முஸ்லிம் அறிஞர்களையே நியமிக்குமாறு அரசாங்கத்தாரை கேட்டுக்கொள்கிறோம்.

அரைச் சம்பளச் சலுகை:—முஸ்லிம்கள் பெரும்பாலும் ஏழைகளாகவும், கல்வியில் முன்னேற்றமில்லாதவர்களாகவும் இருப்பதை யுத்தேசித்து அரசாங்கத்தார் முஸ்லிம்களுக்கு அரைச்சம்பளச் சலுகை காட்டி அவர்களின் படிப்புக்கு ஆதரவு புரிந்துவந்தார்கள். அரசாங்கப் பாடசாலைகளில் மார்க்கக் கல்வி வசதி ஏற்படுத்துவதை உத்தேசித்துச் சென்ற வருஷத்தில் நமது சென்னை மாகாண அரசாங்கத்தார் அரைச் சம்பள சலுகையை எடுத்துவிட உத்தரவு செய்தனர். முஸ்லிம்கள் அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டதற் கேற்ப, அரசாங்கத்தார் அவ்வுத்தரவை ஒருவருஷகாலத்துக்கு நிறுத்தி வைத்திருந்தார்கள். இப்பொழுது சென்னைச் சட்டசபை வரவு செலவு திட்டவிவாதத்தின் போழ்து இவ்வுத்தரவை ரத்துச் செய்து, முஸ்லிம் மாணவர்களுக்கு வழக்கம்போல் அரைச் சம்பளச் சலுகை காட்டவேண்டுமென்று முடிவு செய்திருப்பதாகச் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் சட்டசபையில் கூறி இருப்பதைக்கண்டு நாம் சந்தோஷ மடைகின்றோம். ஒருமுறை போட்ட உத்தரவை மாற்றுவதில்லை என்ற கர்வம் எங்கே வந்து குறுக்கிட்டு, முஸ்லிம்களின் நலம் பாதிக்கப்பட்டு விடுகிறதோ என்ற கவலை இந்நாட்டிலுள்ள பலருக்கும் இருந்து வந்தது. இப்பொழுது அரசாங்கத்தார் முஸ்லிம் சமுகத்தைப் பொருத்தவரை அத்தகைய காரியத்தைச் செய்யாமல், ஏழை முஸ்லிம்களுக்கு வழக்கமாகக் கிடைத்து வந்த சலுகையை இன்னும் கிடைக்கும்படி செய்யுமுன் வந்ததற்கு அரசாங்கத்தைப் பாராட்டுகிறோம்.

நமது நன்றி உரித்தாகுக:—

நம் சங்க சபீர்களில் மௌலானா மௌலவீ முஹம்மது மியான் ஸாஹிப் அவர்கள் சென்ற சில மாதங்களாய் தஞ்சை ஜில்லாவில் சுற்றுப் பிரயாணஞ்செய்து வருகிறார்களென்பது நேயர்கள் அறிந்தவையே. அவர்கள் சென்ற—செல்லும் ஊர்களிலெல்லாம் நம் அபிமானிகளாகிய ஸ்கோதரர்கள் மார்க்க உபன்னியாசத்திற்கு வேண்டிய சௌகரியங்கள் செய்து கொடுத்து, சபீர்களுக்கு அவர்களது சேவையில் ஊக்கங் காட்டி ஆக்கமளித்து வருகின்றார்கள். நமது அரும்மாசிகை சகலமக்களிடமும் உலவிப் பரவிவருவதற்கான கைங்கரியத்தைக்கை கொண்டும்வருகின்றனர். நம் மாசிகைதேசத்தில் பறவுவதுகொண்டு சன்மார்க்கம், சமாதானம், சாந்தம்முதலியன சிர்பெற்று விளங்குமென்பதிலையமில்லை. எனவே, நம் அரும் பத்திரிகையை வாசிப்பவர்கள். காதியானியத்து முதலிய கொள்ளை நோய்க்கி இரையாக மாட்டார்கள். ஈதென்ன? அவ்வாறு இரையாகி வழி தவறியிருப்போரையும் நேர்வழிக்குக் கொண்டு வரும் நிபுணர்களாகவுமாய் விடுகின்றனர். இத்தியாதி ஆவசியங்களையும் தஞ்சை ஜில்லாவிலுள்ள நமது சோதிரர்கள் உணர்ந்து, அரும் மாசிகையின் முற்னேற்றத்தைக் கருதி புரிந்துள்ள உபகாரத்தை உண்ணி அவர்கள் யாவர்களையும் நாம் வாழ்த்துவதோடு இச்சேவையில் அதிக பங்கெடுத்துக்கொண்ட கனவான்களைக் குறித்து ஈங்கு நன்றி செலுத்தாமலிருக்க முடியவில்லை.



திட்டச்சேரி. மார்க்காபிமானிகளான ஜமாஅத்தார்களும், அவ்வூர் நிருவாக சபைத் தலைவரான ஆலீஜனாப். கு. மு. முஹம்மது இஸ்மாயீல் அவர்களும், ஆலீஜனாப் அல்ஹாஜ் M. முகம்மது நூருத்தீன் அவர்களும் சபீர்களுக்குச் செய்த உபகாரமும் மாசிகையின் அபிவிர்த்தியைக் கோரிப் புரிந்துள்ள சேவையும் மறக்கற்பாலதன்று.

நாகூர். சபீர்களை வரவேற்று தக்கமுறையில் உதவிபுரிந்த அவ்விடத்திய நண்பர்களான அபிமானிகளையும் குறிப்பாய், நாகூர் தர்கா டிரஸ்டிகளையும், ஜனாப்களான டவுன் காஜீ மௌலானா மௌலவீ சு. சுல்தான் கலீபா சாஹிப், மௌலானா மௌலவீ அஹ்மது இப்ராஹீம் காதிரிய்யுஷ்ஷத்தாரீ காதிமுஷ்ஷரீ ஆ, மு. அ. முஹம்மது இபுருஹீம் மரைக்காயர், கௌதிய்யா நிருவாகிகள், ஷெய்த் சபா காரியஸ்தர் முதலிய கனவான்களையும் நாம் மிகமிகப் பாராட்டுகின்றோம். அல்லாஹுதஆலா இன்னோரின் இங்ஙன் முயற்சிக்கு மேலான நற்பதவி அளிப்பானாகவும்.

ஜனாப் செய்யித் அதாவுல்லாஹ் ஷாஹ் புகாரீ அவர்கள்

சமீப காலத்தில் காதியான் எனும் ஊரில் ஜம்இய்யத்துல் அஹ்ரார் சபையின் மாபெரும் மஹா நாடு நடந்தேரியதும், அதற்கு எழுபதுனாயிரம் முஸ்லிம்கள் சமுகம் கொடுத்ததும், அதில் முக்கியமான பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டதும், அதுமுதல் இச்சபையார் வழிகெட்ட காதியானியத்தை ஒழிப்பதற்கு அபார முயற்சியெடுத்து வருவதும் நேயர்களறிந்ததே.

இதனால் காதியானிகள் அதிக கவலையுற்றிருந்தனர். அரசாங்கத்தினர், பிரஸ்தாப மஹாநாட்டுத் தலைவரான அமீருஷ்ஷரீஅத் ஸய்யித் அதாவுல்லாஹ் ஷாஹ்புகாரி அவர்கள் மீது வழக்குத் தொடர்ந்திருக்கின்றனர். ஷாஸாஹிப் அன்று செய்த பிரசங்கத்தில் காதியானிகளை அளவுகடந்து தாக்கியிருப்பதாக குற்றம் சாட்டப்பட்டிருக்கின்றார்கள். பிராஸிகூஷன் தரப்பில் பல காதியானிகள் விசாரிக்கப்பட்டனர். அவர்கள் யாவரும் மிர்ஸாஸாஹிபை ஓர் நபியென விசுவாசிப்பதாக சாட்சியம் பகர்ந்தனர்.

ஷாஸாஹிபின் தரப்பில் சாக்ஷிகள் விசாரிக்கப்பட்டுவருகின்றனர். எழுபது சாக்ஷிகள் வரை விசாரிக்கப்படுவர் என எதிர்பார்க்கப்படுகிறது. இதின் மூலம் மிர்ஸாயிகளின் வண்டவாளம் நீதிமன்றத்தில் பதிவு செய்யப்படுவதோடு அவைகளை உலக மஹாஜனங்களும் அறிந்து கொள்ள ஹேது உண்டாய்விட்டது.

இதில் ஒருவிசேஷம் என்னவெனின், இம்மாய மதத்தை ஸ்தாபித்தவரின் கனிஷ்ட புதல்வரும் அவரின் தற்கால கலீபாவுமான மிர்ஸா பஷீருத்தீன் என்பவரும் விசாரிக்கப்படுகிறார். இந்த வழக்கு குர்தாஸ்பூரில் இதற்கென நியமிக்கப்பட்டிருக்கும் நீதிபதியிடம் நடைபெறுகிறது. ஷாஸாஹிப் இவரையும் சாக்ஷி ஜாப்தாவில் சேர்த்து கொடுத்திருந்தார்கள். இவ்வழக்கில், தான் சாக்ஷியாக கூட்டில் ஏறக்கூடாதென்று அளவிலா பிரயத்தனப்பட்டாராம். ஒன்றும் பலிதமாகாமல் பப்ளிக்கோர்ட்டிலேயே வந்து நின்று சாக்ஷியும் பகரவேண்டுமென்று தீர்மானமாயிற்று. தங்களுடைய முரீதீன்கள் யாவரும் அங்கு வந்து கூடிவேண்டுமென்று வேண்டினர். இவர்களின் பத்திரிகையான "அல்பஸ்லு" இதைப்பற்றி கொட்டை எழுத்துக்களில் அறிக்கையிட்டிருக்கிறது. கலீபாசாஹிப் முரீதுகளுடன் ஸ்பெஷல் வண்டியில் வர முடிவுகட்டியுள்ளாராம். இவர் நீதிமன்றத்தில் இதுதான் முதற்தடவையாக ஆஜராகிறார். விசாரணை முடிவடைந்தபின் அதன் முக்கியாம்சங்களை வெளியிடப்படும்.

காதியானியத்து தோன்றி பலவருடங்களாகிறது. மிர்ஸா (அலைஹிமாஅலைஹி) வுடைய காலத்திலேயே அவருடன் பலரும் மல்லாடி வெற்றி பெற்றனர். அதுபோழ்தும், பின்னரும் இதுசம்பந்தமாக மட்டிலடங்காத நூல்கள் எழுதப்பட்டன. உலமாக்களும், எம்பெருமானின் பக்தகோடிகளில் பலரும் இப்பொல்லா இயக்கத்தை எதிர்த்து வேலைசெய்து வருகின்றனர். வடநாட்டிலுள்ள பற்பல அஞ்சுமன்களும், சங்கங்களும் வேலையைச்செய்து வருகின்றன. ஆனால் இந்த நோக்கத்தை முக்கியமாகக் கொண்டுள்ள அஞ்சுமன்கள் இதுவரை ஏற்படவில்லை. இக்குறையையும் நிவர்த்திப்பான் வேண்டி, ஜம்இய்யத்துல் அஹ்ரார் சபை இன்னநோக்கத்தை சிரமேற்கொண்டு வேலை செய்யத் துவங்கியிருக்கிறது. பிரசார வேலையோடு அது பிரசார வேலையும் மும்முரமாய்ச் செய்து வர முடிவும் செய்துளது. வல்ல பெரிய நாயன் கிருபையால் இக்கொள்ளை நோய் இருந்தவிடம் தெரியாமல் பறந்து போய்விடும் என்பதில் ஐயமில்லை.

இம்மாதிரியான தேவை நம் தென்னாட்டிற்கு பலவருட முன்னரே ஏற்பட்டது. நபி பெருமானின் பக்தகோடிகள் ஒன்று சேர்ந்து ஐந்து வருடங்களுக்கு முன்னரே உங்கள் ஹிபாஜத்துல் இஸ்லாம் சங்கத்தை நிருவினர். ஷெ தீயகொள்கை இவண் பரவவிடாமற் தடுப்பதற்கு இச்சங்கம் அரும் பிரயாசைப் பட்டு வெற்றிபெற்றுவிட்டது.)

இத் தீயகொள்கை இஸ்லாத்தை அடியோடு கவிழ்த்து ஓர் புதிய மதத்தை உற்பத்தி செய்யக்கூடியதாகயிருக்கிறது. இந்நூற்றுண்டில் முஸ்லிம்களுக்கு ஏற்பட்ட சோதனையில் இது முதல்தரமான கெடுதியாகும். மார்க்கபக்தியற்றவர்களுக்கு இத்தீயகொள்கை ஓர் நல்ல வழியாகத் தோன்றுகின்றது. பேருக்கு சன் மார்க்கன் என்று வைத்துக்கொண்டு துன் மார்க்கம் நடத்த தோதாயிருக்கிறது. இக்காதியானி குழாத்தினர் ஏதோ உலகத்தில் இஷாயத்துச் செய்கிறார்கள் என்று நினைத்து ஒருசிலரை இத்தீய வழியில் சிக்கவைக்க இச்சிக்கின்றனர். இதுபொழுது இத்தீயவழியின் தீங்கு அந்நிய நாடுகளுக்கும் தெரிந்துபோய்விட்டது. மிஸ்ரு தேசாதிகாரிகளும் துருக்கி தேசத்து உலமாக்களும், சர்வாதிகாரியான காஜீ முஸ்தபா கமால் பாஷா அவர்களும் இத்தீய கொள்கையை அகற்ற முயற்சியெடுத்திருக்கின்றனர். வல்ல பெரிய நாயனின் கிருபையால் இத்தீயகொள்கைக்கு சாவுமணி அடித்தாய்விட்டது என்பதில் ஐயமில்லை.

நபிபெருமான் இறுதி நபி என்பது திருக்குர்ஆனின் பஹிரங்க போதனையாகும். இதனை ஒப்புக்கொண்ட உம்மத்துகள் யாவரும் காதியானிக் கொள்கையை துலைக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

---

### காயல்பட்டணம் முஸ்லிம் ஸ்கூல் மாணவர்களும், ஹஜ்ஜுப் பெருநாள் கொண்டாட்டமும்

காயல்பட்டணம், முஸ்லிம் வாசிகளுக்கும் மற்றும் இதர வகுப்பார்களுக்கும் ஓர் அறிவிப்பு.

சகல புகழும் புகழ்ச்சியும், அல்லாஹ்வுக்காக இருக்கும், பின்பு சலவாத்தென்னும் கருணையும் சலாமென்னும் ஈடேற்றமும் ஸர்தாரே ஆலம் ஸாலாரே அன்பியா எம்பெருமானார் முஹம்மது முஸ்தபா ரசூல் (ஸல்.) அவர்கள் மீதிலும் அவர்களின் கிளைஞர் தோழர்கள்மீதிலும் நல்லடியார்கள் மீதிலும் உண்டாவதாக.

முக்கிய அறிவிப்பது யாதெனில், சிறப்புத் தங்கிய ஈதுல்அல்ஹா, ஹஜ்ஜுப் பெருநாள் 16-3-35 சனிக்கிழமை தினம், காயல்பட்டணம் மேன்மை தங்கிய மகாஜன சபையின் ஆதரவில், கொழும்பு கார்கோ போட் கப்பெனி புரொப்ரைட்டராகிய, ஜனுப் ம. கு. அகமது அசன் அவர்களை மானேஜராக கொண்ட முஸ்லிம் எலிமெண்டரி ஸ்கூல் மாணவர்களாலும் ஷெ ஸ்கூல் மானேஜர், ஷெ ஸ்கூல் ஹெட்மாஸ்டர் திருவாளர் எஸ். சொர்ணம் பிள்ளை, அரபி மாஸ்டர் ஜனுப் மவுலவி மௌருதலி சாகிபு, இன்னும் ஷெ சபையையும் ஷெ கலாசாலையையும் ஆதரிக்கும் கனதனவான்களின் நன்முயற்சியாலும் 16-3-35 சனிக்கிழமை மாலை 4-30 மணிக்கு காயல்பட்டணம் கடற்கரை மைதானத்தில் மாபெருங் கூட்டம் கூட்டப்பட்டு, மூன்று தினங்களாக ஷெ ஸ்கூல் மாணவர்கள், நானுவித பாஷைகளிலும் சொற்பொழிவாற்றினார்கள். இன்னும் ஷெ மாணவர்கள், இந்த சொற்ப காலமாகிய இரண்டு வருடங்களில் திறமையாக கற்ற பலவித சம்பாஷணைகளையும், தேக அப்பியாசங்களையும் குழுமி இருக்கும் ஜனங்களின் முன்னிலையில் சகலரும் ஆனந்திக்குமாறு, அதிவிமரிசையாய் நடத்திக் காண்பித்தார்கள். நமது ஊராகிய காயல்பட்டணத்தில் மாணவர்கள் பிக்ஹு உடைய சட்டதிட்டங்களை அறியவும், ஏவல் விலக்கல்களை அறிந்து, அதன்படி நடந்துகொள்ளவும், இல்மால் எதிர்பார்க்கப்படுகிறது அமலாக இருக்கவேண்டும் என்ற முறையை அனுசரித்த ஸ்கூல், இந்த முஸ்லிம் எலிமெண்டரி ஸ்கூல் ஒன்றே என்றது, இதை கண்ணுற்ற கனவான்கள் யாவர்களுக்கும் நன்குய்—உண்மையாய் தெரிந்த விஷயமே. இதற்குக் காரணம், ஸ்கூல் மானேஜர் அவர்களின் விடா நன்முயற்சியாலும் ஷெ ஸ்கூல் ஹெட்மாஸ்டர் அவர்களின் திறமையைக் கொண்ட தண்டிப்பு ஊக்கத்தினாலும் நாளுக்குநாள் மாணவர்கள் அதிகமாகி, பாடசாலை விடாமுயற்சியுடன் நடைபெற்றுவருவதேயாம். ஆண்டவன் இக்கலாசாலை மேலுக்குமேல் நீடூழிகாலம் தழைத்தோங்க நல்லருள் பாலிப்பாறுக.

குறிப்பு:—வீண்காலம் போக்காது, நுங்களின் மாணவர்களை கல்வி கற்றுக்கொள்ள முஸ்லிம் எலிமெண்டரி ஸ்கூலுக்கு அனுப்புவீர்களென்று நம்புகின்றேன், வஸ்ஸலாம்.

வெ. மு. கி. த. செய்கு சுலையுமான் லெப்பை.

